# தமிழ் அமுது

## மூன்றாம் வகுப்பு

தமிழ்நாடு அரசு
இலவசப் பாடநூல் வழங்கும்
திட்டத்தின்கீழ் வெளியிடப்பட்டது.
(விற்பனைக்கு அன்று)

தீண்டாமை ஒரு பாவச்செயல்
தீண்டாமை ஒரு பெருங்குற்றம்
தீண்டாமை மனிதத்தன்மையற்ற செயல்



தமிழ்நாட்டுப்
பாடநூல் கழகம்
கல்லூரிச் சாலை, சென்னை-600 006

# தேசிய கீதம்

ஜன கண மன அதிநாயக ஜய ஹே
    பாரத பாக்ய விதாதா
பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
    திராவிட உத்கல பங்கா
விந்திய ஹிமாசல யமுனா கங்கா
    உச்சல ஜலதி தரங்கா
தவ சுப நாமே ஜாகே
    தவ சுப ஆசிஸ மாகே
    காஹே தவ ஜய காதா
ஜன கண மங்கள தாயக ஜய ஹே
    பாரத பாக்ய விதாதா
ஜய ஹே ஜய ஹே ஜய ஹே
    ஜய ஜய ஜய ஜய ஹே!

-மகாகவி இரவீந்திரநாத தாகூர்

## நாட்டுப் பண் - பொருள்

இந்தியத் தாயே! மக்களின் இன்ப துன்பங்களைக் கணிக்கின்ற நீயே எல்லாருடைய மனத்திலும் ஆட்சி செய்கிறாய்.

நின் திருப்பெயர் பஞ்சாபையும், சிந்துவையும், கூர்ச்சரத்தையும், மராட்டியத்தையும், திராவிடத்தையும், ஒரிசாவையும், வங்காளத்தையும் உள்ளக் கிளர்ச்சி அடையச் செய்கிறது.

நின் திருப்பெயர் விந்திய, இமய மலைத் தொடர்களில் எதிரொலிக்கிறது; யமுனை, கங்கை ஆறுகளின் இன்னொலியில் ஒன்றுகிறது; இந்தியக் கடலலைகளால் வணங்கப்படுகிறது.

அவை நின்னருளை வேண்டுகின்றன; நின் புகழைப் பரவுகின்றன.

இந்தியாவின் இன்ப துன்பங்களைக் கணிக்கின்ற தாயே! உனக்கு

வெற்றி! வெற்றி! வெற்றி!

# தேசியப் பாடல்

வந்தே மாதரம்!
ஸுஜலாம், ஸுபலாம் மலயஜ ஸீதலாம்
ஸஸ்ய ஸ்யாமலாம் மாதரம்
ஸுப்ர ஜ்யோத்ஸ்நா புலகித யாமிநீம்
புல்ல குஸுமித த்ரும் தள ஸோபிநீம்
ஸுஹாஸிநீம், ஸுமதுர பாஷிநீம்
ஸுகதாம், வரதாம், மாதரம்!
வந்தே மாதரம்!
வந்தே மாதரம்!

-பங்கிம் சந்திர சாட்டர்ஜி

# உறுதிமொழி

'இந்தியா எனது நாடு. இந்தியர் அனைவரும் எனது உடன் பிறப்புகள்.

என் நாட்டை நான் பெரிதும் நேசிக்கிறேன். இந்நாட்டின் பழம்பெருமைக்காகவும் பன்முக மரபுச் சிறப்பிற்காகவும் நான் பெருமிதம் அடைகிறேன். இந்நாட்டின் பெருமைக்குத் தகுந்து விளங்கிட என்றும் பாடுபடுவேன்.

என்னுடைய பெற்றோர், ஆசிரியர்கள், எனக்கு வயதில் மூத்தோர் அனைவரையும் மதிப்பேன். எல்லாரிடமும் அன்பும் மரியாதையும் காட்டுவேன்.

என் நாட்டிற்கும் என் மக்களுக்கும் உழைத்திட முனைந்து நிற்பேன். அவர்கள் நலமும் வளமும் பெறுவதிலே நான் என்றும் மகிழ்ச்சி காண்பேன்'.

## தேசிய ஒருமைப்பாட்டு உறுதிமொழி

'நாட்டின் உரிமை வாழ்வையும் ஒருமைப்பாட்டையும் பேணிக்காத்து வலுப்படுத்தச் செயற்படுவேன்' என்று உளமார நான் உறுதி கூறுகின்றேன்.

'ஒருபோதும் வன்முறையை நாடேன் என்றும், சமயம், மொழி, வட்டாரம் முதலியவை காரணமாக எழும் வேறுபாடுகளுக்கும் பூசல்களுக்கும் ஏனைய அரசியல் பொருளாதாரக் குறைபாடுகளுக்கும் அமைதி நெறியிலும் அரசியல் அமைப்பின் வழியிலும் நின்று தீர்வு காண்பேன்' என்றும் நான் மேலும் உறுதியளிக்கிறேன்.

## தமிழ்த்தாய் வாழ்த்து

நீராரும் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகும்
சீராரும் வதனமெனத் திகழ்பரதக் கண்டமிதில்
தெக்கணமும் அதிற்சிறந்த திராவிடநல் திருநாடும்
தக்கசிறு பிறைநுதலும் தரித்தநறுந் திலகமுமே
அத்திலக வாசனைபோல் அனைத்துலகும் இன்பமுற
எத்திசையும் புகழ்மணக்க இருந்தபெருந் தமிழணங்கே!
தமிழணங்கே!

உன் சீரிளமைத் திறம் வியந்து
செயல் மறந்து வாழ்த்துதுமே!
வாழ்த்துதுமே!
வாழ்த்துதுமே!

- *'மனோன்மணீயம்' பெ. சுந்தரம்பிள்ளை*

## பாரத மாதாவின் முன் மாணவனாகிய / மாணவியாகிய நான் மேற்கொள்ளும் சபதம்

பெயர் :

வகுப்பு : பள்ளி :

நான் ஒரு இந்தியன். சாதி, மத வேறுபாடுகளைக் களைந்து பள்ளிக் கல்வி மூலமாக நான் பெறும் நன்மைகளைத் தாய்த்திருநாட்டின் உயர்வுக்காகப் பயன்படுத்துவேன்.

வந்தே மாதரம்!

கையொப்பம்

ஆசிரியர்க்கு,

இத்'தமிழமுது' குழந்தைகளின் மொழித் திறனை முழுமையாக வளர்க்கும் வகையில் முற்றிலும் புதிய முறையில் வடிவமைக்கப்பட்டுள்ளது.

ஒவ்வொரு பாடமும் ஒரு திறனை முன்நிறுத்தி அமைக்கப்பட்டுள்ளது. மொழிப்பாடத்துக்கே உரிய தனிச் சிறப்பாகப் பல திறன்களை உள்ளடக்கியிருப்பதையும் உணர்வீர்கள்.

மாறுபட்ட கோணத்தில் அமைக்கப்பட்டுள்ள கதைகளும் படங்களும் குழந்தைகளின் கற்பனைத் திறனை வளர்க்கும்; படிக்கும் ஆர்வத்தை ஊட்டும்; அதன்வழி எழுதுதல் திறனையும் வளர்க்கும்.

பல்வகுப்புக் கற்பித்தலுக்கும் குழுக்கற்பித்தலுக்கும் உதவும் வகையில் பயிற்சிகள் அமைக்கப்பட்டுள்ளன. சூழலுக்கு ஏற்ப நீங்கள் கொடுக்கும் பயிற்சிகள் கற்றலை மேலும் இனிமையாக்கும்; எளிமையாக்கும்.

பயிற்சிப் பகுதியுடன் குறிப்பேட்டில் எழுதச் செய்வது குழந்தைகளின் எழுத்தைச் செம்மைப்படுத்தும்.

இந்நூல், குழந்தைகளின் தன்னம்பிக்கையை வளர்க்கும்; மனித உரிமையை அறியச் செய்யும்; மனித நேயத்தை வளர்க்கும்.

எதிர்காலச் சமுதாயத்தை உருவாக்கும் உங்களுக்கு, கற்றல் கற்பித்தலில் இனிமை சேர்க்கும் உற்ற நண்பனாய்த் திகழும்.

என்றென்றும் உங்களுடன்

ஆக்கியோர்

# பொருளடக்கம்

# 1 வனத்திலே ஒரு விழா



வனத்திலே ஒருவிழா
வனவிலங்குத் திருவிழா
விலங்கு எல்லாம் கூடின
விரும்பிப் பாடி ஆடின.



அழகு மயில் வந்தது
ஆடி அசைந்து நடந்தது
வண்ணத் தோகை விரித்தது
வட்ட மிட்டு ஆடியது.



ஒட்டகச் சிவிங்கி வந்தது
ஒயிலாய்க் கழுத்தை வளைத்தது
கிளையை மெல்ல அசைத்துமே
கீழே பூக்களை உதிர்த்தது.



சிவந்த கண்கள் சிமிட்டியே
சின்ன முயல் வந்தது
தத்தித் தத்தி நடந்தது
தாவித் தாவிக் குதித்தது.



முன்னங் காலை மடக்கியே
முன்னால் யானை வந்தது
சின்ன முயலைத் தூக்கியே
சிங்கா ரமாய் நடந்தது.



குட்டிக் கரணம் போட்டுமே
குட்டிக் குரங்கு வந்தது
ஏறிப் பழங்கள் பறித்தது
எல்லா ருக்கும் கொடுத்தது.

* *பாடலை உரிய செய்கைகளுடன் பாடச் செய்க.*

1. வினாக்களுக்கு விடையளி.

1. வனத்தில் என்ன விழா நடந்தது?

2. மயில் என்ன செய்தது?

3. பூக்களைக் கீழே உதிர்த்தது எது?

4. யானை என்ன செய்தது?

5. குரங்கு பழங்களைப் பறித்து என்ன செய்தது?

2. சொற்களை இணைத்து வேறு வேறு தொடர்களாக்கு.

| | | |
|---|---|---|
| தொடர்வண்டி | வேகமாக | ஓடும் |
| முயல் | நீளமாக | இருக்கும் |
| மான் | அழகாக | |
| குதிரை | | |
| பாம்பு | | |

______________________________

______________________________

______________________________

______________________________

______________________________

______________________________

3. குழுவில் ஒரு மாணவர் ஒரு படம் வரைக.
மற்றொருவர் அப்படம் பற்றி ஒரு தொடர் எழுதுக.
இவ்வாறு மாறி மாறி விளையாடுக.



4. கீழே உள்ள பொருள்களில் மலர்விழியின் பொருள்கள் எவை எவை என்று கண்டுபிடித்து அதில் ✓ குறியிடு; வண்ணமிடு.

- மலர்விழியின் புத்தகம் தடித்திருக்கும்; அது திறந்திருக்கும்.
- அவள் பை பெரியதாக இருக்கும்; அதில் பூக்கள் இருக்கும்.
- அவள் எழுதுகோல் நீளமாக இருக்கும்; அதில் கோடுகள் இருக்கும்.
- அவளுடைய பந்து சிறியது; அதில் புள்ளிகள் இருக்கும்.



5. படத்தைப் பற்றி ஆசிரியர் விவரிப்பதைக் கேள். அதற்கேற்ப வண்ணம் தீட்டு.



* இது போன்ற படங்களைக் காட்டி விவரித்துக் கூறுக. மாணவர்களையும் விவரித்துக் கூறச் செய்க.



# 2 இசை நாற்காலி

கலா : இன்று எங்கள் பள்ளியில் 'இசை நாற்காலி' விளையாட்டு விளையாடினோம்.

அருண்: இசை நாற்காலியா! புதுமையாக இருக்கிறதே! எப்படி விளையாடினீர்கள்?

கலா : பத்தொன்பது நாற்காலிகளை ஒரு வட்டத்தில் வைத்தோம். நாங்கள் இருபது பேர் நாற்காலிகளைச் சுற்றி நின்றோம்; இசை இசைக்கப்பட்டது; வட்டத்தைச் சுற்றி ஓடினோம்; திடீரென்று இசை நிறுத்தப்பட்டது.

அருண்: அப்புறம் என்ன செய்தீர்கள்?

கலா : விரைந்து ஓடி ஆளுக்கொரு நாற்காலியில் அமர்ந்து கொண்டோம். வசந்திக்குத் தான் இடம் கிடைக்கவில்லை.

அருண்: அப்படியா! பிறகு...

கலா : ஒரு நாற்காலியை எடுத்துவிட்டோம். மீண்டும் இசை ஒலித்தது. மறுபடியும் வட்டத்தைச் சுற்றி ஓடினோம்; இசையொலி நின்றது; வேகமாக ஓடி ஆளுக்கொரு நாற்காலியில் அமர்ந்தோம்.



அருண் : இப்போது யாருக்கு இடம் கிடைக்கவில்லை?

கலா : பக்கத்து வீட்டுக் கமலாவுக்குத்தான். இதே போல் ஒவ்வொரு முறையும் ஒவ்வொரு நாற்காலியாகக் குறைத்து விளையாடினோம். கடைசியாக ஒரே ஒரு நாற்காலி மட்டும் இருந்தது. நானும் அர்ச்சனாவும் அதைச் சுற்றி ஓடினோம்.

அருண் : இறுதியில் வெற்றி பெற்றது யார்?

கலா : நான்தான்!

அருண் : பாராட்டுகள்! விளையாட்டு மிக நன்றாக இருக்கிறதே! நானும் என் நண்பர்களுடன் விளையாடுவேன்.

1. இசை நாற்காலி விளையாட்டை விளையாடுக. எவ்வாறு விளையாட வேண்டுமென்று விவரிக்க.

2. நீ விளையாடும் விளையாட்டுகளின் பெயர்களை எழுது; எப்படி விளையாடுவாய்? குழுவில் கூறு.

____________, ____________, ____________,

____________, ____________, ____________,

____________, ____________,

____________.

3. பாடிக்கொண்டே விளையாடும் விளையாட்டுகளைக் கூறு.

4. நாளிதழ்களிலிருந்து விளையாட்டுகள் பற்றிய படங்களைச் சேகரி; படத் தொகுப்பு தயார் செய்.



# 3 வண்ணங்கள் பலவிதம்

இலைகள், பூக்கள், விதைகள், கிழங்குகள் போன்றவற்றிலிருந்து வண்ணங்கள் தயாரிக்கலாம்.

## சிவப்பு

தேவையான பொருள்கள் : பீட்ரூட் கிழங்கு, காவிப் பொடி.

செய்முறை : பீட்ரூட்டைத் தோல் நீக்கித் துருவிக்கொள். சிறிதளவு தண்ணீர் சேர். நன்றாகப் பிழிந்து சாறு எடு. அதே அளவு காவிப் பொடியை எடுத்துக்கொள்.
இரண்டையும் சேர்த்து நன்றாகக் கலக்கு. சிவப்பு வண்ணம் கிடைக்கும்.

## மஞ்சள்

தேவையான பொருள்கள் : நன்கு உலர்ந்த மாதுளம்பழத்தின் தோல்; எலுமிச்சம் பழம்.

செய்முறை : மாதுளம் பழத்தோலைச் சேகரித்து வெயிலில் உலர்த்து.
6 துண்டுகளை நீரில் கழுவிப் பாத்திரத்தில் போடு. 200 மில்லி லிட்டர் நீரை அதில் ஊற்று. 10 நிமிடங்கள் கொதிக்க வை.

தோலின் மஞ்சள் நிறம் படிப்படியாக நீரில் இறங்குவதைக் கவனி.

நீர் நன்றாக ஆறிய பிறகு அதில் நான்கு சொட்டு எலுமிச்சம் பழச் சாற்றைச் சேர். அடர்ந்த மஞ்சள் நிறம் கிடைக்கும்.

மற்றொரு முறை : ஆறு சாமந்திப் பூக்களை ஒரு பாத்திரத்தில் போடு. ஒரு கரண்டி நீரை ஊற்றி ஐந்து நிமிடங்கள் கொதிக்க வை. ஆறியபின் வடிகட்டு. மஞ்சள் நிறம் கிடைக்கும்.

### நீலம்

துணிகளுக்குப் பயன்படுத்தும் நீலப்பொடியுடன் சிறிதளவு நீரைச் சேர்த்தால் நீல நிறம் கிடைக்கும். அல்லது பேனாவுக்குப் பயன்படுத்தும் நீல மையையும் பயன்படுத்தலாம்.



செய்து பார்.

- தயாரித்து வைத்துள்ள மஞ்சள் நிறச் சாற்றில் மூன்று தேக்கரண்டி எடுத்துக்கொள். அதனுடன் இரண்டு துளி சொட்டு நீலம் சேர். என்ன நிறம் கிடைத்துள்ளது? ____________

- முன்பே தயாரித்த சிவப்பு நிறச் சாறு இரண்டு தேக்கரண்டி எடுத்துக்கொள். அத்துடன் ஒரு தேக்கரண்டி மஞ்சள் நிறச் சாற்றைச் சேர்த்துக் கலக்கு. கிடைக்கும் நிறமென்ன? ____________

- சிவப்பு நிறச் சாறு ஒரு கரண்டி எடுத்துக்கொள். அத்துடன் மிகக் குறைந்த அளவு நீலப் பொடியைச் சேர்த்துக் குழை. என்ன நிறம் கிடைத்துள்ளது? ____________

உனக்கு விருப்பமான படங்களை வரை. வண்ணம் தீட்டு!



அப்பா, பயணச் சீட்டு வாங்கி விட்டோமா?

சென்ற வாரமே முன் பதிவு செய்து, பயணச்சீட்டு வாங்கி விட்டேன்.

தொடர்வண்டி நிலையம், மருத்துவமனை, அஞ்சலகம், சந்தை போன்ற இடங்களுக்குச் செல்க. அங்கு நடைபெறும் உரையாடல்களைக் கேட்டு அறிக.

## 4 தொடர்வண்டிச் சந்திப்பில்...



# 5 பாட்டி போட்ட புதிர்

குழந்தைகள் : பாட்டி! பாட்டி! கதை கூறுங்கள்.

பாட்டி : இன்று கதைக்குப் பதிலாகப் புதிர்கள் சொல்கிறேன். கவனமாகக் கேளுங்கள்.

கடிக்கத் தெரியாதவனுக்கு
உடம்பெல்லாம் பற்கள்
-அவன் யார்?

காதைத் திருகினால்
கதை சொல்லுவான்
-அவன் யார்?

செய்தி வரும் பின்னே
மணியோசைவரும் முன்னே
-அது என்ன?



தரையில் இருப்பான்
தண்ணீரில் மிதப்பான்
- அவன் யார்?

சிவப்பாய் இருப்பான்;
தெருவில் நிற்பான்;
திறந்த வாய் மூடமாட்டான்
- அவன் யார்?

ஊசி நுழையாத கிணற்றிலே
ஒரு படித் தண்ணீர்
- அது என்ன?

புதிர்களுக்கு விடையைக்
கண்டுபிடியுங்கள் பார்க்கலாம்!



ஏதேனும் பத்து
விடுகதைகளைச்
சேகரி. குழுவில்
கூறி விடையைக்
கேள்.

1. சொல் கோபுரம் அமைக்க.

தமிழ் மாதத்தின் பெயர்

தங்கத்தை இவ்வாறும் கூறுவர்

நெல் விளையும் இடம்

முகம் பார்க்க உதவும்

விழுதுகளைக் கொண்டது

பார்க்க கேட்க உதவும்



2. சுறா விழுங்கியவற்றைக் கண்டுபிடித்து எழுது.

பாம்பு______, ______, ______, ______

______, ______, ______, ______

______, ______, ______, ______

பூ பு எ பா பை ம் பெ றா னை லி யா கு ஈ ட ம் ங் ணி கு ந் டு ஆ ர ங் ப ச டி த து ட்

# 6 எண்ணிக்கொண்டே இருப்பேன்

நளினி ஊஞ்சலாடிக் கொண்டிருந்தாள். பார்ப்பதை எல்லாம் எண்ணுவது அவளுக்குப் பிடிக்கும். வீடுகளை எண்ணினாள். ஒன்பது வீடுகள்... மரங்களை எண்ணினாள். பதினைந்து மரங்கள்... தெருவில் சென்ற மனிதர்களையும் எண்ணினாள். வானத்தில் இருந்த விண்மீன்களை எண்ணத் தொடங்கினாள். ஒன்று, இரண்டு,... மூன்று... அப்போது அவள் அண்ணன் அமுதன் அங்கு வந்தான்.

“நளினி என்ன செய்கிறாய்?”
என்று கேட்டான்.

“விண்மீன்களை எண்ணுகிறேன்... ஏழு, எட்டு, ஒன்பது... அடடா! மேகம் மறைத்துவிட்டதே” வருந்தினாள் நளினி.

“கவலைப்படாதே! பறக்கும் பலூன் தொட்டிலில் ஏறிச் சென்று விண்மீன்களை எண்ணலாம்,” என்றான் அமுதன்.

இருவரும் பறக்கும் தொட்டிலில் ஏறினர். மேலே செல்லும் போது நளினி கீழே பார்த்தாள். மூன்று வீடுகள், பன்னிரண்டு மரங்கள், ஒன்பது பசுக்கள். வானத்தில் மிதந்து சென்ற மேகங்களைக் காட்டி



"அண்ணா, அதோ!

சிங்கம் போன்ற மேகம்
யானை போன்ற மேகம்
பாம்பு போன்ற மேகம்
முயல் போன்ற மேகம்"
என்றாள் நளினி.



"அதோ, நிலாவைப் பார். எவ்வளவு அழகாக இருக்கிறது" என்றான் அமுதன். ஆனால் நளினியின் கவனம் விண்மீன்களை எண்ணுவதிலேயே இருந்தது. தொண்ணூற்று ஒன்று, தொண்ணூற்று இரண்டு, தொண்ணூற்று மூன்று, தொண்ணூற்று நான்கு, தொண்ணூற்று ஐந்து...

"எல்லா விண்மீன்களையும் எண்ணி முடித்து விட்டாயா?" என்று சிரித்துக் கொண்டே கேட்டான் அமுதன்.

"எல்லாவற்றையும் எண்ண முடியவில்லை; ஆனாலும் எண்ணிக் கொண்டே இருப்பேன்," என்றாள் நளினி.

1. விடையளி.

1. நளினிக்கு மிகவும் பிடித்த செயல் எது?
2. பறக்கும் தொட்டிலில் சென்ற நளினி கீழே பார்த்து எவற்றை எல்லாம் எண்ணினாள்?
3. மேகங்களின் வடிவங்கள் எவற்றைப் போல் இருந்தன?
4. நளினி எல்லா விண்மீன்களையும் எண்ணிவிட்டாளா? ஏன்?



2. உனக்குப் பிடித்த ஓய்வு நேரச் செயல்களை எழுது. ____________

____________________________

3. சரியான சொல்லால் நிரப்பு.

- பத்தாம் ____________ (என் / எண்) பேருந்து வந்தது.
- அதில் ____________ (நான் / நாண்) ஏறினேன்.
- ____________ (பனம் / பணம்) கொடுத்துப் பயணச்சீட்டு வாங்கினேன்.
- பேருந்திலிருந்து வெளியே பார்த்தேன்; ____________ (வாணம் / வானம்) மேகமூட்டமாக இருந்தது.
- அருகிலிருந்த பூந்தோட்டத்திலிருந்து நல்ல ____________ (மணம் / மனம்) வீசியது. என் ____________ (மணம் / மனம்) மகிழ்ந்தது.

4. விளையாடுவோம் !

கரும்பலகையில் ஒரு சொல்லை எழுது.
அச்சொல்லில் உள்ள ஓர் எழுத்தைப் பயன்படுத்தி வேறு சொல்லை எழுதி விளையாடு.










5. புதிய சொற்களை உருவாக்குவோம்.

விண்மீன்கள் மீன் விண் கண் கப்பல் ______ ______ ______

புதையல் ______ ______ ______ பலகை ______ ______ ______

6. சொற்களை இணைத்துத் தொடர் உருவாக்கு.

அணில் மரம் பழம்

(எ–டு) அணில் மரத்தில் ஏறிப் பழம் தின்றது.

இரவு வானம் நிலா

பள்ளி மணி உணவு

வண்டு தேன் பூ

மீனவர் தோணி கடல்

செய்துபார்.

ஒரு கைக்குட்டை அல்லது சதுர வடிவப் பாலிதீன்தாள், நூல், சிறுகட்டை அல்லது பொம்மை இவற்றைக் கொண்டு பாரசூட் செய்.



# 7 செந்தமிழ் நாடு

செந்தமிழ் நாடெனும் போதினிலே இன்பத்
தேன்வந்து பாயுது காதினிலே – எங்கள்
தந்தையர் நாடென்ற பேச்சினிலே ஒரு
சக்தி பிறக்குது மூச்சினிலே. (செந்தமிழ்)

கல்வி சிறந்த தமிழ்நாடு – புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ்நாடு – நல்ல
பல்வித மாயின சாத்திரத்தின் மணம்
பாரெங்கும் வீசும் தமிழ்நாடு. (செந்தமிழ்)

வள்ளுவன் தன்னை உலகினுக்கே – தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு – நெஞ்சை
அள்ளும் சிலப்பதி காரமென் றோர் மணி
யாரம் படைத்த தமிழ்நாடு. (செந்தமிழ்)

"-தேசியக்கவி" சி.சுப்பிரமணிய பாரதியார்

* பாடலைச் சந்தநயத்துடன் தனியாகவும்
குழுவாகவும் பாடச்செய்க.

# 8 முதலையா? நரியா?

ஒரு பெரிய ஏரி. அதில் முதலை ஒன்று வசித்து வந்தது. அங்குத் தண்ணீர் குடிக்க வரும் விலங்குகளை அது பிடித்துத் தின்னும்.

ஒரு நாள் நரி ஒன்று தண்ணீர் குடிக்க ஏரியில் இறங்கியது. முதலை சட்டென்று நரியின் காலைக் கவ்வியது.

"ஆ! முதலை...!" நரி அதிர்ச்சி அடைந்தது. தப்பிக்க வேண்டுமே! என்ன செய்வது? சிந்தித்தது.

"எனது கால் என்று நினைத்து மரத்தின் வேரைப் பிடித்துள்ளாயே"

என்று நரி தந்திரமாகக் கூறியது. "அப்படியா!" என்று முதலை ஏமாந்து வாயைத் திறந்தது. உடனே நரி காலை இழுத்துக் கொண்டது; ஒரே தாவலில் கரை ஏறியது.

"என்னையா பிடிக்கப் பார்க்கிறாய்?" என்று கூறி நரி சிரித்தது.

முதலைக்குக் கோபம் அதிகமானது. நரியை எப்படியாவது பிடிக்க வேண்டுமே! ஒரு திட்டம் தீட்டியது.

மறுநாள், கரையில் கிடந்த நாவல் பழங்களைத் திரட்டிக் குவியலாக்கியது.



அதனுள் தன்னை மறைத்துக் கொண்டது.

வழக்கம் போல் நரி தண்ணீர் குடிக்க ஏரிக்கு வந்தது. பழக்குவியலைப் பார்த்தது. 'எவ்வளவு பழங்கள்!' ஆவலோடு அருகே சென்றது.

'பழக்குவியல் அசைகிறதே!' நரி திடுக்கிட்டது! கூர்ந்து கவனித்தது. 'ஏதோ வெள்ளையாய்த் தெரிகிறதே! முதலையின் பற்களாய் இருக்குமோ..? இது முதலைதான்!'

முதலையின் தந்திரத்தை நரி புரிந்துகொண்டது. "முதலையே! என்னையா பிடிக்கப் பார்க்கிறாய்!" என்று கூறிக் கொண்டே ஓடியது.

முதலைக்கு மீண்டும் ஏமாற்றம். 'நரியைப் பிடித்தே ஆக வேண்டும். என்ன செய்வது?'

ஒரு நாள் தூரத்தில் நரி வருவதைப் பார்த்தது. உடனே மணலில் படுத்து, இறந்தது போல் பாசாங்கு செய்தது. நரி முதலையைப் பார்த்தது. முதலை அசையவேயில்லை.

'அருகில் மணல் ஈரமாக இருக்கிறதே! சற்று முன்னர்தான் முதலை நீரிலிருந்து வந்திருக்க வேண்டும். என்னைப் பிடிக்கத்தான் இறந்தது போல் நடிக்கிறது!'

நரி ஒரு தந்திரம் செய்தது.

"இறந்து போன முதலை தன் வாலை ஆட்டுமே!" என்று உரக்கக் கூறியது.



இதைக் கேட்ட முதலை, உடனே தன் வாலை வேகமாக ஆட்டியது.

நரி கலகல எனச் சிரித்தது. "இறந்து போன பிறகு காது கேட்குமா? வாலைத்தான் ஆட்ட முடியுமா?" என்று கூறியது.

முதலைக்கு எல்லையில்லாத கோபம். நரியைப் பிடிக்கப் பாய்ந்தது.

"என்னை உன்னால் பிடிக்க முடியாது" என்று கூறிக்கொண்டே நரி தப்பி ஓடியது.

முதலையும் நரியும் இப்படி மாற்றி மாற்றித் தந்திரம் செய்து கொண்டேயிருந்தன.

**1. விடை கூறு.**

1. காலைக் கவ்விய முதலையிடம் நரி என்ன சொல்லித் தப்பியது?
2. நரி நாவற் பழங்களைச் சாப்பிடாமல் ஓடியது ஏன்?
3. முதலை இறந்தது போல் நடித்தது ஏன்?
4. 'முதலை இறக்கவில்லை', என்று நரி ஏன் சந்தேகப்பட்டது?
5. முதலை வாலை ஆட்டியதும் நரி என்ன கூறியது?

**2. நரியைப் பிடிக்க முதலை வேறு என்னென்ன தந்திரங்கள் செய்து இருக்கும்?**



3. படித்துப் பார்; சரியானவற்றை ✓ குறியிடு.

- முதலை மரத்தின் வேரைக் கவ்வியது.
- முதலை பழக்குவியலுள் தன்னை மறைத்துக் கொண்டது.
- குவிந்திருந்த நாவல் பழங்களை நரி தின்றது.
- முதலை சொன்னதைக் கேட்டு நரி தன் வாலை ஆட்டியது.
- முதலை இறந்தது போல மணலில் படுத்திருந்தது.

4. புதிய சொற்களின் பொருளை அறிந்து கோடிட்ட இடத்தை நிரப்பு.

பாசாங்கு : போலியாக நடித்தல்

குவியலாக : ஒன்றாகச் சேர்த்து வைத்தல்

எல்லையில்லாத : அளவில்லாத

- நாய்க்குட்டி தூங்குவது போலப்__________செய்தது.
- தோப்பில் பழங்கள் ______ குவிக்கப்பட்டிருந்தன.
- எனக்குப் பரிசு கிடைத்ததால் __________ மகிழ்ச்சி அடைந்தேன்.



## 5. நடித்துக் காட்டுவோம்.



- சிறு குச்சி ஒன்றை வகுப்பறையின் மையத்தில் வை. ஒவ்வொருவரும் முன் வந்து தங்களது கற்பனையில் குச்சியைப் பல்வேறு பொருளாக நினைத்து நடித்துக்காட்டுக.

  (எ-டு) சீப்பாக நினைத்துத் தலை சீவுவதுபோல் நடித்தல்.



- 'என்னை விட்டுவிடு' -இது போன்ற தொடரை எடுத்துக் கொள். அந்தத் தொடரைக் கோபம், பயம், சிரிப்பு, அழுகை, வியப்பு உணர்வு வருமாறு நடித்துக்காட்டு.





இந்தத் தொடரைக் கட்டளையாக, வேண்டுகோளாக, மிரட்டலாக, சத்தமாக, மென்மையாகச் சொல்லிக் காட்டு.



- உன் சூழலில் நீ கேட்கும் வெவ்வேறு ஒலிகளை எழுப்பி நடித்துக்காட்டு.

  (எ-டு) பலத்த காற்று, மழை, இடி,
  பறவைகள் முதலியவற்றின் ஓசை.

- முதலை, நரி பாத்திரங்களை ஏற்றுக் குரல் ஏற்றத்தாழ்வுடன் பேசி நடித்துக்காட்டு.

  இதுபோன்று, உனக்குத்தெரிந்த கதைகளில் வரும் பாத்திரங்களுக்கேற்பப் பேசி நடித்துக்காட்டு.

## 6. சொல்வோம்! எழுதுவோம்!

| | | | |
|---|---|---|---|
| நரி | நீர் குடித்தது.<br>உரக்கச் சிரித்தது.<br>தப்பி ஓடியது. | நரிகள் | நீர் குடித்தன.<br>உரக்கச் சிரித்தன.<br>தப்பி ஓடின. |
| முதலை | நீரில் நீந்தியது.<br>மறைந்து கொண்டது.<br>வாலை ஆட்டியது. | முதலைகள் | நீரில் நீந்தின.<br>மறைந்து __________.<br>வாலை __________. |
| குரங்கு | மரத்தில் ஏறியது.<br>காயைப் பறித்தது.<br>கீழே போட்டது. | குரங்குகள் | மரத்தில் ஏறின.<br>காய்களைப் ____<br>கீழே ______ |

# 9 மரங்கள் சிரித்தன!

ஒரு பெரிய மாமரம். அதில் நீண்ட நாள்களாகக் கிளி ஒன்று வாழ்ந்து வந்தது. 'தான் வாழும் மாமரமே சிறந்தது' என்று அது எப்போதும் பெருமை பேசும்.

மாமரத்தின் அருகில் ஒரு வேப்பமரம். அதில் காகம் ஒன்று வாழ்ந்து வந்தது. ஒரு நாள் காகம் கிளியிடம், "இத்தனை பெருமை பேசுகிறாயே! அப்படி என்ன சிறப்பு உன் மரத்தில்?" என்று கேட்டது.

கிளியும், "அகன்று விரிந்த என் மரத்தைப் பார் நீண்ட இலைகள், பருத்த காய்கள் எங்கும் நிறைந்துள்ள அழகைப் பார்! மாம்பழத்தை விரும்பாதவர் மாநிலத்தில் உண்டோ?

விழாக்காலங்களில் மாவிலைகளைத் தோரணமாகக் கட்டி மகிழ்கிறார்கள். பலவகைப் பறவைகளும் விலங்குகளும் நாடிவருவது என் மரத்தையே" என்று ஆரவாரமாகக் கூறியது.





அதைக் கேட்ட காகம், "என் வேப்பமரத்தின் அருமை உனக்குத் தெரியுமா? பசுமையான இலைகள், பச்சை வண்ணக் காய்கள், மஞ்சள் நிறக் கனிகள் மரமெங்கும் நிறைந்து இருக்கும் அழகைப் பார்!

என் மரத்தின் இலை, பூ, பட்டை, வேர் எல்லாமே நோய் தீர்க்கும் மருந்தாகும்.

விதைகளிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய் பல வகைகளிலும் பயன்படுகிறது. எனவே, என் மரமே சிறந்தது" என்றது.

இவற்றின் சச்சரவைக் கேட்டுக் கொண்டிருந்த மாமரமும் வேப்பமரமும் சிரித்தன.

ஏன் சிரித்தன?

## 1. விடை கூறு.

1. வேப்பமரத்தின் எப்பகுதிகள் மருந்தாகின்றன?
2. மாவிலைகளை எதற்குப் பயன்படுத்துகிறோம்?
3. வேப்ப விதையிலிருந்து என்ன தயாரிக்கலாம்?
4. மாமரத்தின் பயன்களில் மூன்றைக் கூறு.

## 2. நீ பார்த்த மரங்கள் பற்றிய விவரங்களை எழுது.

| மரத்தின் பெயர் | பூவின் நிறம் | பழத்தின் நிறம் |
|---|---|---|
| வேம்பு | வெண்மை | மஞ்சள் |
| ________ | ________ | ________ |
| ________ | ________ | ________ |
| ________ | ________ | ________ |
| ________ | ________ | ________ |

## 3. பொருத்தமான பன்மைச் சொற்களை எழுது.

| | |
|---|---|
| இலை | இலைகள் |
| காய் | ________ |
| கனி | ________ |
| விதை | ________ |
| கிளி | ________ |

| | |
|---|---|
| பழம் | பழங்கள் |
| மரம் | ________ |
| காகம் | ________ |
| நிறம் | ________ |
| தோரணம் | ________ |

## 4. கேளுங்கள் என் பெருமையை...




மரம், பறவை, விலங்கு, பழம் போன்றவற்றில் ஏதேனும் ஒன்றை வரைக. அட்டைப் பெட்டியில் போடுக. ஒருவர் ஒரு படத்தை எடுக்க. படத்தில் இருப்பது தன் பெருமைகளைப் பேசுவது போலப் பேசிக்காட்டுக. இவ்வாறு விளையாட்டைத் தொடர்க.

## 5. பொருள் அறிந்து, தொடரை நிரப்பு.

| | |
|---|---|
| மாநிலத்தில்-உலகில் | நாடி-விரும்பி |
| சச்சரவை-விவாதத்தை | கனிகள்-பழங்கள் |

- மாம்பழத்தை விரும்பாதவர் __________ உண்டோ?
- பறவைகளும் விலங்குகளும் __________ வருவது என் மரத்தையே.
- மஞ்சள் நிறக் __________ மரமெங்கும் நிறைந்திருக்கும்.
- பறவைகளின் __________ கேட்ட மரங்கள் சிரித்தன.






6. ஏதேனும் ஒரு பொருளின் பெயரைக் கரும்பலகையில் எழுது; ஒவ்வொருவரும் அதற்குப் பொருத்தமான வருணனைச் சொல் ஒன்றை எழுதுக.

7. கோடிட்ட இடத்தை நிரப்பிப் படி.

சிவப்பாகவும், ஆலமரம், விழுதுகள், சிறியவை, கூடு.



மரங்களில் பெரியது ________

இதில் ________ தொங்கும்.

இதன் பழங்கள் மிகச் ________

இவை உருண்டையாகவும் ________ இருக்கும்.

இம்மரத்தில் பறவைகள் ________ கட்டி வாழும்.

8. உனக்குப் பிடித்த ஏதேனும் ஒரு விலங்கைப் பற்றி விவரித்துக் கூறு; எழுது.





9. படத்தைப் பார். நிகழ்ச்சியை விவரித்துக் கூறு.









# 10 இரவில் ஓர் உலா

நீலா தன் பொம்மை 'மாலு'வுடன் உயிரியல் பூங்காவிற்குச் சென்றாள். கூட்டத்தில் மாலுவைத் தவற விட்டுவிட்டாள். எங்குத் தேடியும் மாலு கிடைக்கவில்லை. நீலா சோர்வுடன் வீடு திரும்பினாள்.

மாலுவும் நீலாவைத் தேடிப் பூங்காவில் அலைந்தது. இரவு வந்தது. இருட்டில் பளபளவென்று ஏதோ மின்னியது. மாலு அதன் அருகில் சென்றது.



தூங்கிக்
கொண்டிருந்தவர்களை
ஏன் எழுப்பினாய்?

என் வேலை காவல்
காப்பது. ஆபத்து என்றால்
ஒலியெழுப்பி எச்சரிப்பேன்.

நீயும் இரவில்
தூங்கமாட்டாயா?

ஆம், தூங்கமாட்டேன்.
இரவில்தான் எலி
போன்றவற்றை
வேட்டையாடுவேன்.



இந்தப் பறவைகள்
தூங்குகின்றனவே! கீழே
விழுந்துவிடாதா?

இவை தூங்கும்போது
கால் விரல்களால்
கிளைகளைக் கெட்டியாகப்
பிடித்துக் கொண்டிருக்கும்.
கீழே விழாது.

இமைகள் அசையவே இல்லையே!
கண்களைத் திறந்துகொண்டே
தூங்க முடியுமா என்ன?

எங்களுக்கு இமைகள்
இல்லை. அதனால்
எப்பொழுதும் கண்கள்
திறந்தே இருக்கும்.












பொழுது விடிந்தது. நீலா மாலுவைத் தேடி வந்தாள். பூங்காவில் மாலுவைக் கண்டதும் மகிழ்ந்தாள்.

“நீலா, உனக்குத் தெரியுமா? பகலைவிட இரவில்தான் உயிரியல் பூங்கா மிக அருமையாக உள்ளது!” என்றது மாலு.

1. எது சொன்னது? கூறு; எழுது.

- "என் வேலை காவல் காப்பது." ________________
- "இரவில்தான் நான் எலி போன்றவற்றை வேட்டையாடுவேன்." ________________
- "பகலில் அவசரமாகப் புற்களை விழுங்குவோம்." ________________
- "எங்களுக்கு இமைகள் இல்லை." ________________
- "இரவில்தான் உயிரியல் பூங்கா மிக அருமையாக உள்ளது." ________________

2. நீ உயிரியல் பூங்காவிற்குச் சென்றிருக்கிறாயா? அங்கு நீ பார்த்தவற்றைப் பற்றிக் கூறு.

நீ பார்த்த விலங்குகள், பறவைகளில் உனக்கு வியப்பு ஊட்டியவை எவை! என்?



3. சொல்லுவோம்; எழுதுவோம்.






4. குட்டிப்பாப்பா சுண்டல் தின்றாள். சுண்டல் கீழே சிதறியது. சட்டையில் இருந்த கோழிக்குஞ்சுகள்...

கதையைத் தொடர்ந்து கூறு.













# 11 வரிக்குதிரை

வரிக் குதிரைக்கு விக்கல். அருகில் இருந்த ஏரியில் தண்ணீர் குடித்தது. ஆனாலும் விக்கல் நிற்கவில்லை.

விக்கிக் கொண்டே வந்தது. தூங்கிக் கொண்டிருந்த கரடி விக்கல் சத்தம் கேட்டு விழித்தது. "என்ன? விக்கலா? மூன்று முறை குட்டிக்கரணம் போடு. விக்கல் நின்றுவிடும்" என்றது.

வரிக்குதிரையும் குட்டிக் கரணம் போட்டது. ஆனால் விக்கல் நிற்கவில்லை.

மரத்திலிருந்த குரங்கு இதைப் பார்த்துக் கொண்டிருந்தது. அது வரிக்குதிரையை நோக்கி,



"பின்னங்கால்களில் நின்று கொண்டே நூறிலிருந்து ஒன்றுவரை விரைவாக எண்களைச் சொல். விக்கல் நின்று விடும்" என்றது.

"நூறு..., தொண்ணூற்று ஒன்பது..., தொண்ணூற்று ஏழு...



ஐயோ! தப்புத் தப்பாக வருகிறதே!" வரிக்குதிரை மீண்டும் எண்களைச் சொல்ல ஆரம்பித்தது.

அப்போது முள்ளம்பன்றி ஒன்று அங்கு வந்தது. "விக்கல் நிற்க நான் ஒரு வழி சொல்லட்டுமா? இந்த ஏரியைச் சுற்றி இரண்டு முறை ஓடு. விக்கல் நின்றுவிடும்" என்றது.

வரிக்குதிரையும் ஏரியைச் சுற்றி ஓடியது. ஓடி ஓடி மூச்சுத்தான் வாங்கியது; விக்கல் நிற்கவில்லை.

அப்போது அங்கு வந்த யானை வரிக்குதிரையைப் பார்த்து வியந்தது. "உன் உடலில் ஏதோ மாற்றம் தெரிகிறதே!" என்று கேட்டது.

வரிக்குதிரை தன் உடலைப் பார்த்தது; திகைத்து நின்றது. "ஐயோ! அழகான என் வரிகள் எல்லாம் ஒன்று சேர்ந்துவிட்டனவே!"

யானை அருகிலிருந்த ஆற்றை நோக்கி ஓடியது; துதிக்கையால் தண்ணீரை உறிஞ்சி வந்தது; வரிக்குதிரையின் முகத்தில் முழுவேகத்தில் தண்ணீரைப் பீச்சி அடித்தது. வரிக்குதிரை அதிர்ச்சி அடைந்தது. என்ன அதிசயம்! விக்கல் நின்றுவிட்டது.

"ஆனால் என் அழகிய வரிகள்...?" என்றது வரிக்குதிரை.

நீரில் நனைந்ததால் அது குளிரால் நடுங்கியது;



'அச்! அச்!' என்று தும்மியது; உடல் குலுங்கியது; ஒன்றாகச் சேர்ந்த வரிகள் பிரிந்தன.

"ஆகா! அழகிய என் வரிகள் வந்துவிட்டனவே!" மகிழ்ந்தது வரிக்குதிரை.
ஆனால்... "அச்... அச்... அச்..."

1. விடை எழுது.

1. வரிக்குதிரைக்கு எந்தெந்த விலங்குகள் ஆலோசனை கூறின?
2. வரிக்குதிரையின் விக்கல் நிற்கக் குரங்கு என்ன வழி சொன்னது?
3. வரிக்குதிரையின் உடலில் ஏற்பட்ட மாற்றம் என்ன?
4. வரிக்குதிரையின் விக்கல் நிற்க யானை என்ன செய்தது?
5. வரிக்குதிரை தும்மியபோது என்ன நிகழ்ந்தது?





2. இக்கதையைப் பங்கேற்று நடித்துக்காட்டு.

3. வரிக்குதிரை தொடர்ந்து தும்மிக்கொண்டே இருந்திருந்தால் விலங்குகள் என்னென்ன யோசனைகள் கூறியிருக்கும்?

4. பிரித்து எழுது.

மரத்திலிருந்து = மரத்தில் + இருந்து

நூறிலிருந்து = ____________

அருகிலிருந்து = ____________

காட்டிலிருந்து = ____________

5. சரியான சொல்லை எடுத்துக் கோடிட்ட இடத்தில் நிரப்பு.

| | | |
|---|---|---|
| பந்தை மேலே ________. | எறி | எரி |
| கோழிக்கு ________ போடு. | இரை | இறை |
| வாழைப் பழத்தோலை ________. | உறி | உரி |
| கடிதத்தை ________யில் போடு. | உறை | உரை |
| நாய் போல் ________. | குறை | குரை |
| தோட்டத்தில் பூப் ________. | பறி | பரி |
| பரிசுப் பொட்டலத்தைப் ________. | பிறி | பிரி |
| வரிசை ________ உட்கார். | மாறி | மாரி |
| வாழைப்பூவைக் ________ சமை. | கரி | கறி |
| கரும்பலகையில் ________ வட்டம் வரை. | அரை | அறை |

6. பல சொற்களை உருவாக்கு.

வரிக்குதிரை குதி ________ ________ ________ ________

முள்ளம்பன்றி ________ ________ ________ ________

7. ஒரே பொருள்தரும் சொற்களைக் கோடிட்டுப் பொருத்து.

வரி | விண்மீன் | உடை | காடு | ஆறு

ஆடை | கோடு | நட்சத்திரம் | நதி | வனம்

8. விளையாடுவோம்.

பல வகைக் கட்டளைகளை எழுதிப் பெட்டியில் போடுக. குழுவில் ஒவ்வொருவரும் ஒரு அட்டையை எடுக்க. அதில் எழுதியிருப்பதற்கு ஏற்ப நடித்துக்காட்டுக. (எ-டு) பறவை போல் பற.

மருத்துவர் போல் நடி.

9. கட்டங்களை நிரப்பிப் படி.












10. வரிக்குதிரை சொல்லும் புதிருக்கு விடை கூறு.

''எனக்கும் மேசைக்கும் நாய்க்கும் உள்ள ஒற்றுமை.''

''எனக்கும் சதுரங்கப் பலகைக்கும் கரடிப் பொம்மைக்கும்.''



''எனக்கும் அணிலுக்கும் வாளிக்கும்.''

''எனக்கும் பட்டத்திற்கும் நாய்க்கும்.''

* இதுபோன்று பொருள்களை ஒப்பிட்டு ஒற்றுமை வேற்றுமைகளைக் கூறச்செய்க.

# 12 அறிவால் வெல்லுவேன்

ஓர் அழகிய மலை. அதன் அடிவாரத்தில் மலைஆடுகள் கூட்டமாக வாழ்ந்து வந்தன. அதில் குறும்புக்கார ஆட்டுக்குட்டி ஒன்று இருந்தது. அது தன் தோழர்களுடன் மலையில் ஏறும்; அங்குள்ள வழுக்கும் பாறைகளில் வழுக்கி விளையாடும்; சரிவான பாறைகளில் தாவித்தாவி ஓடும்: அங்குள்ள காட்டில் சுற்றித் திரியும்.

தாய் ஆடு தன் குட்டியைப் பற்றி எப்போதும் கவலைப்படும். ஏன் தெரியுமா? அந்தக் காட்டில் புலிகளும் வசித்து வந்தன.

தாய் ஆடு காட்டில் விளையாடப் போகும் தன் குட்டியிடம், "இருபக்கங்களையும் பார்த்துக் கவனமாகச் செல். காற்றில் புலியின் வாசம் வருகிறதா?



முகர்ந்துபார்; அருகில் ஏதாவது சலசலப்புக் கேட்கிறதா? கூர்ந்து கவனி; அபாயம்' என்று தெரிந்தால் முதலில் குரங்குகள் ஒலி எழுப்பும்; உடனே மான்கள் பயந்து ஓடும்; மிக அருகில் புலி இருந்தால், அப்பகுதியில் ஒருவித அமைதி நிலவும். இந்த அறிகுறிகள் தென்பட்டால் எச்சரிக்கையாக நடந்து கொள்ள வேண்டும்" என்று அறிவுரைகூறும்.

அதற்கு ஆட்டுக்குட்டியோ,

*'அழகு மலைக்குச் செல்லுவேன்*
*ஆடிப் பாடித் துள்ளுவேன்*
*அருகில் புலியே வந்தாலும் – என்*
*அறிவால் அதனை வெல்லுவேன்'*

என்று துணிவுடன் பதில் கூறும்.

ஒரு நாள் மாலை நேரம். மலையில் மேயச் சென்ற ஆடுகள் எல்லாம் வீட்டிற்குத் திரும்பின.



குறும்புக்கார ஆட்டுக்குட்டி மட்டும் பாடிக் கொண்டே தனியாக வந்தது.

திடீரென்று ஓர் உறுமல் சத்தம். ஆட்டுக்குட்டி அச்சத்துடன் திரும்பிப் பார்த்தது.

மிக அருகில் ஒரு புலி. தப்பி ஓடலாமா? எங்காவது ஒளிந்து கொள்ளலாமா? என்ன செய்வது? ஆட்டுக்குட்டி துணிச்சலுடன்-

'அழகு மலைக்குச் செல்லுவேன்
ஆடிப் பாடித் துள்ளுவேன்
அருகில் புலியே வந்தாலும்— என்
அறிவால் அதனை வெல்லுவேன்', என்று பாடியது.

புலி கேலியாக, "ஓ! உன் அறிவால் என்னை வெல்வாயா? உன் அறிவுத் திறமையைக் காட்டு பார்க்கலாம்!" என்றது.

உடனே ஆட்டுக் குட்டி, "நான் உன்னிடம் சில புதிர்களைக் கேட்பேன். நீ சரியான விடை சொல்ல வேண்டும். சொல்ல முடியாவிட்டால் என்னை 'அறிவாளி' என்று ஏற்றுக்கொண்டு விட்டுவிட வேண்டும். சரியா!" என்று கேட்டது.

"சரி!" என்று தலையாட்டியது புலி.

"விடிய விடியப் பூந்தோட்டம்
விடிந்து பார்த்தால் வெறுந்தோட்டம்"
அது என்ன?

புலி 'திரு திரு' என்று விழித்தது.



"பூந்தோட்டம், வெறுந்தோட்டமா ஒன்றும் புரியவில்லையே! நீயே சொல்" என்றது.

'வானம், விண்மீன்கள்' என்று ஆட்டுக்குட்டி துள்ளிக் கொண்டே கூறியது. இன்னொரு புதிர் கூறுகிறேன்.

"தின்னப் பழம் பழுக்கும்
தின்னாத காய் காய்க்கும்"–அது என்ன?

புலி குறுக்கும் நெடுக்குமாக நடந்தது; ஆழ்ந்து சிந்தித்தது; ஆனாலும் அதற்கு விடை தெரியவில்லை.



'வேப்பமரம்' என்று விடையைக் கூறியது ஆட்டுக்குட்டி.

"நீரிலும் இருப்பான் நிலத்திலும் இருப்பான்; வாலோடு பிறப்பான் வாலை இழப்பான் –அவன் யார்?" என்றது ஆட்டுக்குட்டி.

இதற்கும் புலிக்கு விடை தெரியவில்லை.

"தவளை" என்று கூறியது ஆட்டுக்குட்டி.

உடனே புலி, "நீ அறிவாளிதான்! போய் வா" என்று பாராட்டி அனுப்பியது.

ஆட்டுக்குட்டி மகிழ்ச்சியுடன், '*அழகு மலைக்குச் செல்லுவேன்...*' என்று பாடிக்கொண்டே சென்றது.



## 1. விடையளி.

1. ஆட்டுக்குட்டி தன் தோழர்களுடன் எப்படியெல்லாம் விளையாடும்?
2. காட்டில் புலியின் நடமாட்டத்தை எப்படி அறியலாம்?
3. ஆட்டுக்குட்டி பாடிய பாடலை இசையுடன் பாடு.
4. ஆட்டுக்குட்டி கூறிய விடுகதைகளில் ஒன்றைக் கூறு.

## 2. நிகழ்ச்சிகளை வரிசைப்படுத்திக் கூறு; எழுது.

தப்பிக்கப் புலியிடம் கேள்விகள் கேட்டது.
எதிரே புலியைக் கண்டது.
ஆட்டுக்குட்டி விளையாடச் சென்றது.
புலி ஆட்டுக்குட்டியை விட்டுவிட்டது.
புலிக்கு விடைகள் தெரியவில்லை.

## 3. பொருத்தமான சொல்லை எடுத்து எழுது.

| | |
|---|---|
| ✦ ஆட்டுக்குட்டி ________ அடிவாரத்தில் வாழ்ந்து வந்தது. | மலை,மழை |
| ✦ ஆடுகள் __________களை உண்ணும். | தலை, தழை |
| ✦ ________ யின் உறுமல் சத்தம் கேட்டு ஆட்டுக்குட்டி நடுங்கியது. | புலி, புளி |
| ✦ ஆட்டுக்குட்டிக்குத் தப்பிச்செல்ல ________ தெரியவில்லை. | வழி, வலி |

4. பொருத்தமான எதிர்ச்சொல் அட்டைகளை இணை; தொடர்களை நிரப்பு.




- மலையின் கீழே வீடுகள் உள்ளன.

  மலையின் மேலே கோயில் உள்ளது.

- மாலாவின் வீட்டிற்கு __________ பள்ளி உள்ளது.

  மருத்துவமனை __________ உள்ளது.

- ஆமை __________ செல்லும்.

  முயல் __________ ஓடும்.

- தாயைக் காணாமல் குழந்தை __________.

  தாயைப் பார்த்ததும் குழந்தை __________.

- ஆலமரம் __________. ஆலம்பழம் __________.

5. புதிய சொற்களை ஒருவர் சொல்ல மற்றவர் எழுதுக.

| | | |
|---|---|---|
| அடிவாரத்தில் | வழுக்கும் | தாவித்தாவி |
| பூந்தோட்டம் | குட்டிக்கரணம் | தந்திரம் |
| பாசாங்கு | அசைபோடுகிறோம் | உறிஞ்சியது |

இந்தச் சொற்கள் எந்தப் பாடத்தில் உள்ளன என்று கண்டுபிடித்து எழுதியதைச் சரிபார்.

6. ஒலித்துப் பழகுவோம்.

மலையில் மழை பெய்தது.
மழைநீர் பள்ளத்தில் விழுந்தது.
மரங்கள் செழிப்பாய் வளர்ந்தன.
பழங்கள் பழுத்துக் குலுங்கின.
விலங்குகள் மகிழ்ச்சியாய் வாழ்ந்தன.

7. இடைவெளி விட்டு எழுதி வாழ்த்து மடல் தயாரிக்க.





8. சொல் ஒன்று பொருள் இரண்டு. சரியான சொல்லை எடுத்து எழுது.

புல்லை மேய்ந்திடும்..
பாட்டுக்கு நீயும்.. ________

நான்கில் ஒரு பங்கு..
நாம் நடக்க உதவுவதும்.. ________

நதியைக் குறிப்பது..
நான்கும் இரண்டும்.. ________

மலர்கள் சேர்ந்தால்..
மங்கும் பொழுதும்.. ________

நிலவின் மறுபெயர்..
மாதத்தைக் குறிப்பதும்.. ________

கூரையில் வேய்வது..
குதித்து நீயும்.. ________

ஆடு, கால், ஆறு, மாலை, திங்கள், ஓடு.

9. ஒத்த ஒலிப்புடைய சொற்களை எழுது.

தலை ________, ________, ________, ________, ________

வளை ________, ________, ________, ________, ________

தழை ________, ________, ________, ________, ________

# 13 தம்பி என்ன தெரியுமா?

நெட்டையான காலுடனே
நீளமான கழுத்துடனே
சுட்டுப் பொசுக்கும் மணலில் கூடச்
சுமையைத் தூக்கிச் செல்லும் அது
என்ன தெரியுமா? தம்பி என்ன தெரியுமா?

முறத்தைப் போன்ற காதுடனே
முகத்தில் ஒற்றைக் கையுடனே
உரலைப் போன்ற காலுடனே
ஊர்வலத்தில் வருமே அது
என்ன தெரியுமா? தம்பி என்ன தெரியுமா?

பட்டுப் போன்ற உடலுடனே
பல நிறத்தில் இறகுடனே
கட்டையான குரலுடனே
களித்து நடனம் ஆடும் அது
என்ன தெரியுமா? தம்பி என்ன தெரியுமா?

வட்டமான முகத்துடனே
வளைந்திருக்கும் மூக்குடனே
முட்டை போன்ற கண்ணுடனே
வேட்டை ஆடும் இரவில் அது
என்ன தெரியுமா? தம்பி என்ன தெரியுமா?

–அழ. வள்ளியப்பா

இரு குழுக்களாகப் பிரிந்து, ஒரு குழு பாடலைப் பாடுக; மற்றொரு குழு விடையைக் கூறுக;



# 14 நமது இதழ்



(மாலா, கவிதா, முத்து மூவரும் சிறுவர் இதழ்களைப் படித்துக் கொண்டிருந்தனர்.)

கவிதா : சிறுவர் இதழ்களில் வரும் படக்கதை எனக்கு மிகவும் பிடிக்கும்.

முத்து : 'கண்டு பிடி' பகுதிதான் எனக்கு மிகவும் பிடிக்கும்.

மாலா : எனக்குப் பிடித்தது 'வரைந்து பார்' பகுதிதான். நான் அதில் வண்ணம் தீட்டுவேன்.

கவிதா : நாம் மூவரும் சேர்ந்து இது போன்ற இதழ் ஒன்றைத் தயாரிப்போமோ?

மாலா : தயாரிக்கலாமே! நான் பாடல்களையும் சிறு சிறு துணுக்குகளையும் எழுதுகிறேன்.

கவிதா : நான் படங்கள் வரைகிறேன்.

முத்து : நான் ஒரு கதை எழுதுகிறேன்.

மாலா : சரி, நமக்குத் தெரிந்தவற்றைப் பெரிய தாளில் எழுதுவோம். அதைச் செய்திப் பலகையில் ஒட்டுவோம். அனைவரும் படிக்கலாம்.



கவிதா : இதழுக்கு 'நமது இதழ்' என்று பெயர் வைப்போமா?

மாலா : நன்றாக உள்ளது.

முத்து : நம் வகுப்பு மாணவர்கள் அனைவரும் குழுவாகப் பிரிவோம்; மாதம் ஒரு இதழ் தயாரிப்போம்.

கவிதா : அப்படியே செய்வோம்.

# நமது இதழ்

## கோமாளி

சின்னச் சின்னக் கல் அடுக்கி
சிங்காரக் கோட்டை கட்டி
கோட்டை மேலே ஏறிக்கிட்டு
கோமாளி வேஷம் போட்டுக்கிட்டு
நில்லாதே! நில்லாதே
நல்லாப் பாரு கண்ணாலே!

—மாலா



## ரோஜா



சிவப்பு வண்ண ரோஜா
சிரிக்கும் வண்ண ரோஜா
எங்க மாமா நேருவுக்குப்
பிடித்த நல்ல ரோஜா.

— கவிதா

## கதை

தோட்டத்தில் ஒரு கிளி இரையைத் தின்று கொண்டிருந்தது. அங்கு வந்த பாலன் கிளியைப் பிடித்தான். வீட்டிற்குக் கொண்டு சென்று கூண்டினுள் அடைத்தான். சாப்பிட பழமும் கொடுத்தான். கிளி சாப்பிடவே இல்லை. "கீக் கீக்" என்று கத்திக் கொண்டே இருந்தது. கூண்டிற்குள் அங்கும் இங்குமாய் பறந்தது. அங்கு வந்த பாலனின் அக்கா, "அம்மோ பாவம்! கிளியை விட்டு விடு. அது தன் வீட்டிற்குச் செல்லட்டும்," என்றாள். பாலனும் கூண்டைத் திறந்தான். கிளி விர்ரென்று பறந்து சென்றது.



— முத்து

## விடுகதை

1. பச்சைப் பச்சை ராணிக்கு
வெள்ளை வெள்ளை
முத்துகள்.
— அது என்ன?

2. கழுத்துண்டு தலையில்லை
கையுண்டு விரல் இல்லை.
— அது என்ன?

1. எடுப்போம் படிப்போம்.



ஒவ்வொருவரும்
தமக்கு விருப்பமான
பாடலின் இரண்டு
வரிகளைத்
தனித்தாளில் எழுதுக.
பெட்டியில் போடுக.

பெட்டியிலிருந்து ஒவ்வொருவரும் ஒரு தாளை எடுத்துப் படிக்க. அது யாருடைய கையெழுத்து என்று கண்டுபிடிக்க.

2. கீழே கொடுக்கப்பட்டுள்ள கோடுகள், புள்ளிகள், வளைவுகள் இவற்றைக் கொண்டு படத்தை நிரப்பு.







இதுபோன்று வேறு வேறு படங்களையும் வரைந்து பழகு.

# 15 தேடித் தேடி..!



யானைப் பாகனின் மகன் பாபு, குட்டி யானைக்கு உணவு கொண்டு வந்தான். குட்டி யானை எங்கே? பாபு தேடத் தொடங்கினான்.

மிதிவண்டியில் ஏறிச் சாலைக்கு வந்தான். கண்ணுக்கு எட்டிய தூரம் வரை பார்த்தான். யானைக்குட்டியைக் காணவில்லை. எதிரே வந்தவரிடம், "ஐயா! என் யானைக் குட்டியைப் பார்த்தீர்களா?" என்று கேட்டான்.

அவர் "நான்கு சாலைகள் சந்திக்கும் இடத்திலுள்ள போக்குவரத்து விளக்கின் அருகில் ஒரு யானைக் குட்டியைப் பார்த்தேன்" என்றார்.



பாபு நாற்சந்தியை நோக்கி விரைந்தான்.

அங்குக் குட்டி யானையைக் காணவில்லை. அப்போது அங்கு வந்த ஓர் இளைஞனிடம், "அண்ணா! எங்கள் குட்டியானையைக் காணவில்லை. நீங்கள் பார்த்தீர்களா?" என்று கேட்டான்.



"இந்தத் தெரு முனையில் 'ஒலி எழுப்பாதே' என்பதைக் காட்டும் குறியீட்டுக் கம்பம் உள்ளது. அதன் பக்கத்தில் ஒரு குட்டியானை நிற்கிறது" என்றார்.

பாபு மிதிவண்டியில் ஏறி விரைந்தான். ஒரு பலகையில்,

**எச்சரிக்கை**

பாலம் பழுதடைந்துள்ளது
மாற்று வழியில் செல்க

என்று எழுதியிருந்தது. அதைப் படித்தான். மாற்று வழியில் சென்றான். 'ஒலி எழுப்பாதே' குறியீட்டுக் கம்பத்தைக் கண்டான். ஆனால் அங்கும் குட்டியானையைக் காணவில்லை. பாபுவுக்கு அழுகையே வந்துவிட்டது.

“தம்பி! ஏன் அழுகிறாய்?” என்று அருகில் நின்ற பாட்டி கேட்டார். “என் குட்டி யானையைக் காணவில்லை” என்றான் பாபு.

“இப்போதுதான் தொடக்கப் பள்ளியின் முன்னால் ஒரு யானைக்குட்டி நிற்பதைப் பார்த்தேன்” என்றார் பாட்டி. பாபு பள்ளியை நோக்கிச் சென்றான். பள்ளிக்கு அருகே பெரிய விளம்பரப் பலகை. அங்கே...




**1. வினாக்களுக்கு விடை எழுது.**

1. பாபு நாற்சந்திக்கு ஏன் விரைந்தான்?
2. பாபு பார்த்த குறியீடுகள் யாவை?
3. பாபு குட்டியானையைப் பற்றி யார் யாரிடம் கேட்டான்?
4. பாபு குட்டி யானையை எங்கே கண்டு பிடித்தான்?

2. பொருத்து.



தொடர் வண்டிப் பாதை

அபாயம்



ஒலி எழுப்பாதே



நில், கவனி, செல்

3. ஒருபாதி இங்கே... மறுபாதி எங்கே..?

செய்தித்தாள்களிலிருந்து விளம்பரங்களைச் சேகரி. அட்டையில் ஒட்டு. ஒவ்வொன்றையும் இரண்டு துண்டுகளாக்கு. கலந்து வை. ஒவ்வொருவரும் ஒரு விளம்பரத் துண்டை எடுக்க. மறுபாதி எங்கே? கண்டுபிடித்து நண்பருடன் சேர்ந்து நிற்க.

4. பின்வரும் விளம்பரத்தைப் படித்துப் பொருள் மாறாது இடம்விட்டு எழுது.

கார்த்தி கைத்தீபத் திரு விழா

______________________

புத்தகக்கண் காட்சிநடை பெறும்

______________________

நடைபா தையில் நடக்க

______________________

பொங் கல்சிறப்புத் தள்ளு படி விற்பனை

______________________

5. தொலைக்காட்சியில் கேட்ட விளம்பரங்களைப் பேசிக்காட்டு.

6. விளம்பரங்களைப் படி; பொருத்தமான இடத்தில் எழுது.

சத்தம் செய்யாமல் அமைதியாகப் படிக்கவும்.

மாதந்தோறும் முதல்வாரம் தடுப்பூசி போடப்படும்.

இன்றைய சேமிப்பு நாளையப் பாதுகாப்பு.

புல் தரையில் நடக்காதீர்கள்.

1. ______________________

______________________



2. ______________________

______________________



3. ______________________

______________________



4. ______________________

______________________



# 16 அமுதா பள்ளி செல்கிறாள்

அமுதா தன் தம்பிப் பாப்பாவிற்கு விளையாட்டுக் காட்டிக் கொண்டிருந்தாள். அப்போது குழந்தைகள் பள்ளிக்குச் செல்வதைப் பார்த்தாள். பள்ளியில் என்ன நடக்கிறது என்று பார்க்க விரும்பினாள்.

தன் வேலைகளை வேகமாக முடித்துவிட்டுப் பள்ளியை நோக்கிச் சென்றாள். சன்னல் வழியாகப் பார்த்தாள். அங்கே ஆசிரியர் கதை கூறிக்கொண்டிருந்தார். மாணவர்கள் ஆர்வத்துடன் கேட்டுக் கொண்டிருந்தனர். அமுதாவிற்கும் அவர்களோடு சேர்ந்து கதை கேட்க ஆசையாக இருந்தது. 'நானும் ஏன் பள்ளி செல்லக் கூடாது?' என்ற நினைவுடன் வீடு திரும்பினாள்.



மறுநாள் காலை எழுந்தவுடன் அமுதாவுக்கு ஒரு எண்ணம் தோன்றியது. அவள் தன் கிளியிடம், "நீ நாள்தோறும் பள்ளிக்குச் செல்; ஆசிரியர் கற்றுக் கொடுப்பதைக் கவனமாகக் கேள்; பிறகு அதை எனக்குச் சொல்லித்தா" என்றாள்.

கிளி தன் சிறகுகளைப் படபடவென்று அடித்துப் பறந்தது; பள்ளிக்குச் சென்றது; சன்னலில் அமர்ந்தது; ஆசிரியர் கற்றுத் தருவதைக் கவனித்தது; பிறகு வீட்டிற்கு வந்து அமுதாவுக்குச் சொல்லிக் கொடுத்தது. இதுபோலவே தினமும் செய்தது.




ஒரு நாள் கிளி, "இன்று உனக்கு வாய்பாடு கற்றுத் தருகிறேன்" என்றது.

வாய்பாட்டைக் கற்றுக்கொண்ட அமுதா தன் கோழிகளை இரண்டு இரண்டாக எண்ணினாள்.

அவளுக்கு அளவில்லாத மகிழ்ச்சி. சுறுசுறுப்பாகத் தன் வேலைகளைத் தொடர்ந்தாள்.

அமுதா மறுபடியும் கோழிகளை இரண்டு இரண்டாக எண்ணினாள். "அட! கோழிகளில் ஒன்று குறைகிறதே... எங்கே?"



சுற்றும் முற்றும் பார்த்தாள்.

அப்போது ஒருவர் கோழி ஒன்றைத் தூக்கிக்கொண்டு பதுங்கிப் பதுங்கிச் சென்று கொண்டிருந்தார்.

"ஐயோ! என் கோழி! என் கோழி!" என்று கூச்சலிட்டாள். அருகில் இருந்தவர்கள் ஓடிவந்தனர். அதற்குள் கிளி பறந்து சென்று, கோழியைத் தூக்கிச் சென்றவரைக் கொத்தியது. அவர் பயந்துபோய்க் கோழியை விட்டுவிட்டு ஓடிவிட்டார்.

அங்கு வந்த அனைவரும், "அமுதா! கோழி காணாமல் போனதை எப்படிக் கண்டுபிடித்தாய்?" என்று வியப்போடு கேட்டனர்.

"என் கிளி தினமும் பள்ளிக்குச் செல்கிறது; பாடம் படிக்கிறது; எனக்கும் கற்றுத் தருகிறது" என்று கூறினாள்.

ஊர் மக்கள் அவள் பெற்றோரிடம், "அமுதாவைப் பள்ளிக்கு அனுப்புங்கள்; நம் கிராமத்தில் பள்ளி செல்லாத குழந்தைகளே இருக்கக் கூடாது" என்றனர்.



அமுதாவின் பெற்றோரும் அவளைப் பள்ளிக்கு அனுப்ப ஒப்புக் கொண்டனர்.

இப்போது அமுதா தினமும் மகிழ்ச்சியோடு பள்ளி செல்கிறாள்.

1. யார் சொன்னது?

- நீ நாள்தோறும் பள்ளிக்குச்செல்.
- வாய்பாட்டை உனக்குக் கற்றுத் தருகிறேன்.
- கோழிகளில் ஒன்று குறைகிறதே!
- நம் கிராமத்தில் பள்ளி செல்லாத குழந்தைகளே இருக்கக் கூடாது.

2. விடைகளுக்கு ஏற்ற வினாவைப் பொருத்து.

| | |
|---|---|
| ஆசிரியர் கதை சொல்லிக் கொண்டிருந்தார். | அமுதா எங்கு செல்ல விரும்பினாள்? |
| அமுதா பள்ளி செல்ல விரும்பினாள். | வாய்பாடு சொல்லிக் கொடுத்தது எது? |
| கிளி வாய்பாடு சொல்லிக்கொடுத்தது. | கதை சொல்லிக் கொண்டிருந்தவர் யார்? |
| அமுதா கோழிகளை இரண்டு இரண்டாக எண்ணினாள். | ஊரார் என்ன சொன்னார்கள்? |
| ஊரார், "அமுதாவைப் பள்ளிக்கு அனுப்புங்கள்" என்றனர். | அமுதா கோழிகளை எவ்வாறு எண்ணினாள்? |

இதுபோன்ற வினா விடை அட்டைகளைத் தயார் செய். ஒரு குழு விடை அட்டையைக் காண்பிக்க. மற்றொரு குழு அதற்கான வினா அட்டையை எடுத்துப் படிக்க.







3. இக்கதை உணர்த்தும் கருத்தை ✓ செய்.

- வாய்பாடு கற்க, கோழிகளை எண்ண வேண்டும்.
- எல்லாக் குழந்தைகளும் பள்ளிக்குச் செல்ல வேண்டும்.
- கிளிகளைப் பள்ளியில் சேர்க்க வேண்டும்.

4. பொருத்தமான சொல் அட்டைகளை இணைத்துத் தொடர் உருவாக்கு; எழுது.

| | | |
|---|---|---|
| கிளி | பள்ளி | விளையாடினர் |
| அமுதா | பறந்து | ஏறின |
| அணில் | மரத்தில் | சென்றாள் |
| ஆடுகள் | பந்து | சென்றது |
| சிறுமியர் | மலையில் | ஏறியது |

5. பின்வரும் தொடர்களைப் படித்து வினாக்கள் எழுது.

- ______________________________

மீனவர்கள் கடலுக்குள் மீன்பிடிக்கச் சென்றனர்.

- ______________________________

கடலில் புயல் வீசியதால் படகு கவிழ்ந்தது.

- ______________________________

அந்த வழியே வந்த கப்பல் மீனவர்களைக் காப்பாற்றியது.



6. படத்தைப் பார். உன்னால் எத்தனை கேள்விகள் கேட்க முடியும்? கேள்; எழுது.

(எ-டு) சிறுவன் தொலைக்காட்சியில் என்ன பார்க்கிறான்?



7. படத்திலுள்ள பறவைகள் / விலங்குகள் பற்றி வினாக்கள் கேள்; எழுது.

குரங்கு என்ன சாப்பிடும்?



## 17

தன் வீட்டுக்கு அருகில் குட்டி டிங்கு மணலில் ஒரு அழகான வீடு கட்டியது. அங்கு வந்த முரட்டு மிங்கு அதைக் காலால் மிதித்துக் கலைத்தது; ஏளனமாகச் சிரித்தது. டிங்குவிற்குக் கோபம் கோபமாக வந்தது. பாவம் டிங்குவால் ஒன்றும் செய்ய முடியவில்லை.

மறுநாள் டிங்கு புதுச் சட்டை அணிந்துகொண்டு துள்ளி விளையாடிக் கொண்டிருந்தது.



அப்பொழுதும் முரட்டு மிங்கு அங்கு வந்து ஈரச் சேற்றை

டிங்குவின் சட்டைமேல் வாரி இறைத்தது. டிங்குவிற்கு அழுகையே வந்துவிட்டது.

மற்றொரு சமயம் டிங்கு பழத்தைச் சுவைத்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தது. மிங்கு அதைப் பறித்து வீசி எறிந்தது. டிங்குவிற்கு ஆத்திரமாக வந்தது. பாவம் அதனால் என்ன செய்ய முடியும்?

ஒரு நாள் முரட்டு மிங்கு சோர்வாகப் படுத்திருந்தது. குட்டி டிங்குவிற்கு ஆச்சரியம். இதற்கு என்னவாயிற்று? உடல் நலம் சரியில்லையோ! அருகில் சென்றது. சிறிது நேரம் அதை உற்றுப் பார்த்தது.

'இதற்கு உதவி செய்யலாமா வேண்டாமா?' என்று சிறிது நேரம் யோசித்தது; சட்டென்று வீட்டுக்குள் சென்றது; கையில் பழத்துடன் வந்தது.

### 1. விடை எழுது.

1. மிங்கு டிங்குவிற்கு என்னென்ன தொல்லைகள் கொடுத்தது?
2. டிங்கு கையில் கொண்டுவந்த பழத்தை என்ன செய்திருக்கும்?
3. நீ டிங்குவாக இருந்தால் என்ன செய்திருப்பாய்?

### 2. பாடத்திற்குப் பொருத்தமான தலைப்பைக் கொடு.



### 3. நீ எப்போதெல்லாம்....

மகிழ்ச்சியாக இருப்பாய்? ____________________

____________________

கோபமாக இருப்பாய்? ____________________

____________________

4. கதையின் அமைப்பை எழுது.



| கதையில் வருபவர்கள் | ______________________ |
|---|---|
| கதை நிகழ்ந்த இடம் | ______________________ |
| கதை நிகழ்ச்சிகள் | |

______________________________________________

______________________________________________

______________________________________________

______________________________________________

கதை முடிவு ______________________________________

______________________________________________

5. முதல் எழுத்தை மாற்றி வேறு சொல்லாக்கி எழுது.




| | | | | |
|---|---|---|---|---|
| துள்ளி | பள்ளி | ______ | ______ | ______ |
| குட்டி | ______ | ______ | ______ | ______ |
| மரம் | ______ | ______ | ______ | ______ |
| நரி | ______ | ______ | ______ | ______ |
| காற்று | ______ | ______ | ______ | ______ |
| கன்று | ______ | ______ | ______ | ______ |



6. கதையைப் படி.

அடர்ந்த காடு. அதில் ஒரு பெரிய மரம். ஒருநாள் அம்மரத்தில் தீப்பற்றியது. பறவைகள் எல்லாம் பறந்து விட்டன.

ஒரு குருவி மட்டும் எப்படியாவது மரத்தைக் காப்பாற்ற நினைத்தது. அருகில் இருந்த குளத்துக்குச் சென்று தன் அலகால் நீரை எடுத்து வந்து மரத்தில் தெளித்தது. மீண்டும் மீண்டும் நீரைத் தெளித்துக் கொண்டே இருந்தது. அதன் விடாமுயற்சியைப் பார்த்த மேகம் மனம் இளகியது. மழையைச் சொரிந்தது. தீ அணைந்தது. குருவி மகிழ்ந்தது.



இக்கதை உணர்த்தும் கருத்தை ✓ குறியிடு.

- காட்டில் அடிக்கடி தீப்பிடிக்கும்.
- எந்த ஒரு செயலிலும் விடாமுயற்சி தேவை.
- நீரைத் தெளித்துக் கொண்டே இருந்தால் மழை பெய்யும்.



# 18 இன்பப் பயணம்



இன்று எங்கள் ஆசிரியர், "நாம் இடைவேளைக்குப் பிறகு ஒரு புதிய செயலில் ஈடுபடப் போகிறோம்" என்றார். அந்தப் புதிய செயல் என்னவாக இருக்கும் என்று சிந்தித்துக்கொண்டே வேலைகளை வேகவேகமாக முடித்தோம்.

இடைவேளை முடிந்தவுடன் ஆசிரியர், 'இப்பொழுது நாம் அனைவரும் நம் ஊர் ஏரிப்பகுதிக்குச் செல்வோம்" என்றார். நாங்கள் மகிழ்ச்சியுடன் புறப்பட்டோம்.

வழியெங்கும் உயரமான மரங்கள். தரையெங்கும் வண்ண வண்ணப் பூக்கள். வண்ணத்துப் பூச்சிகள் அங்குமிங்கும் பறந்து திரிந்தன. இருபக்கங்களிலும் பச்சைப் பசேலென்று வயல்கள். இவற்றையெல்லாம் பார்த்து மகிழ்ந்தோம். பேசிக்கொண்டே ஏரிக்கரையைச் சென்றடைந்தோம்.

ஆசிரியர், "அதோ பாருங்கள்! பெரிய ஆலமரம். அதில் பலவகையான பறவைகள் இருக்கின்றன. அருகில் சென்று அமைதியாகக் கவனியுங்கள்" என்றார்.

நாங்கள் அமர்ந்து அமைதியாகக் கவனித்தோம். பறவைகள் 'கீச் கீச்' என்று கத்தின. சில பறவைகள் சிறகுகளைப் 'படபட' வென அடித்துப் பறந்தன. சில கிளைக்குக் கிளை மாறி மாறி அமர்ந்தன. சில தம் அலகுகளால் சிறகுகளைக் கோதின.



பாரி, "அதோ! அங்கே பாருங்கள்" என்றான். அனைவரும் கவனித்தோம்.

காகம் ஒன்று குச்சிகளை அடுக்கிக் கூடு கட்டிக் கொண்டிருந்தது. மரங்கொத்திப் பறவை தன் கூரிய அலகால் மரத்தின் பட்டையை 'டொக்! டொக்!' எனக் கொத்திக்கொண்டிருந்தது. குயில் மறைந்திருந்து 'குக்கூ.. குக்கூ...' எனக் கூவிக்கொண்டிருந்தது. மைனா ஒன்று தன் குஞ்சுகளுக்கு இரை ஊட்டிக்கொண்டிருந்தது.

அருகில் உள்ள ஓடையில் நீர் சலசலவென ஓடிக் கொண்டிருந்தது. அங்கே சில கொக்குகள் ஒற்றைக் காலில் நின்று கொண்டிருந்தன.

நாங்கள் அங்குக் கிடந்த இறகுகள், இலைகள், பூக்கள், கூழாங்கற்களைச் சேகரித்தோம்.

வகுப்பிற்குத் திரும்பினோம். அன்று முழுவதும் நாங்கள் பார்த்தவை பற்றிப் பேசிக்கொண்டே இருந்தோம்.



* மாணவர்களைக் களப்பயணம் அழைத்துச் செல்க. அவர்கள் அனுபவத்தை வகுப்பில் பகிர்ந்து கொள்ளச் செய்க.

1. நீ சென்ற களப்பயணம் பற்றி எழுது.

2. நீ பார்த்த பறவைகள் பற்றிய விவரங்களைக் கட்டத்தில் எழுது.





| பெயர் | நிறம் | அலகு |
|---|---|---|
| கிளி | பச்சை | வளைவானது |
| ________ | ________ | ________ |
| ________ | ________ | ________ |
| ________ | ________ | ________ |

3. பாடப்பகுதியில் வரும் இரட்டைச் சொற்களைக் கொண்டு கோடிட்ட இடத்தை நிரப்பு.

- பறவைகள் ________ என்று கத்தின.
- பறவைகள் சிறகுகளைப் ________ என அடித்தன.
- மரங்கொத்தி ________ எனக் கொத்தியது.
- ஓடையில் நீர் ________ வென ஓடியது.

4. கீழ்க்குறிப்பிட்டுள்ள இடங்களில் நீ பார்த்தவற்றை எழுது.

பூங்கா ____________, ____________, ____________, ____________

குளம் ____________, ____________, ____________, ____________

பள்ளி ____________, ____________, ____________, ____________

கடைவீதி ____________, ____________, ____________, ____________

அஞ்சலகம் ____________, ____________, ____________, ____________

5. கொடுக்கப்பட்டுள்ள சொற்களைப் பயன்படுத்திப் பொங்கல் விழாவைப் பற்றி ஐந்து வரிகள் எழுது.



6.சேர்த்தெழுது. விடைகளைப் பாடப்பகுதியில் அடிக்கோடிடு.

தரை + எங்கும் = ______________________

அங்கும் + இங்கும் = ______________________

இவற்றை + எல்லாம் = ______________________

ஏரி + கரை = ______________________

மறைந்து + இருந்து = ______________________

7. எதிர்ச்சொற்களைப் பாடத்திலிருந்து எடுத்து எழுது.

குட்டையான x ____________ பல x ____________

பழைய x ____________ தொலைவில் x ____________

சிறிய x ____________ மெதுவாக x ____________

8. படத்தைப் பார். மழைநாள் பற்றி எழுது.



## 9. என் நண்பன்

குமார் என் நண்பன். தினமும் நாங்கள் இருவரும் சேர்ந்து பள்ளிக்குச் செல்வோம். அவனுடைய சக்கர நாற்காலியை நான் தள்ளிக்கொண்டு செல்வேன்.



குமாருக்கு நிறையக் கதைகள் தெரியும். புதிய புதிய கதைகளைக் கூறுவான். நகைச்சுவைத் துணுக்குகளைக் கூறி எல்லாரையும் சிரிக்க வைப்பான்.

இந்த ஆண்டு பள்ளி ஆண்டுவிழா நாடகத்தில் அரசனாக நடித்தான். வசனங்களை மிக அழகாகப் பேசினான்.

சக்கர நாற்காலியில் உட்கார்ந்து கொண்டே எங்களோடு சேர்ந்து பந்து விளையாடுவான்.

எங்கள் எல்லாருக்கும் குமாரை மிகவும் பிடிக்கும்.

1. குமாரைப் போன்ற குழந்தைகள் உன் பள்ளியில் உள்ளனரா? அவர்களுக்கு நீ எந்த விதத்தில் உதவி செய்வாய்?

2. உன் நண்பனைப் பற்றிய விவரங்களை எழுது.

# 19 வேண்டும் முயற்சி



சிலந்தி வலையைப் பாருங்கள்
சின்னஞ் சிறிய பூச்சியே
வளைந்து வளைந்து புதுமையாய்
வட்ட வலையைப் பின்னுமே!



தேனீக் கூட்டைப் பாருங்கள்
திறமை யோடு ஒற்றுமை
பேணி வீட்டைக் கட்டுமே
பெரிய முயற்சி வேண்டுமே!



எறும்புப் புற்றைப் பாருங்கள்
எள்ளைப் போன்ற எறும்புகள்
அருமை யான முயற்சியால்
அழகுப் புற்றைச் செய்தன.



குருவிக் கூட்டைப் பாருங்கள்
குடுக்கை போன்று பின்னியே
விரைவில் கட்டி முடிக்குமே
வேண்டும் முயற்சி என்றுமே!

-பெருஞ்சித்திரனார்



1. பாடலைத் தனியாகவும் குழுவாகவும் பாடுக.

2. சொல் அட்டைகளை இணைத்துத் தொடர் உருவாக்கு.

| | | |
|---|---|---|
| சிலந்தி<br>தேனீ<br>எறும்பு<br>குருவி | புற்றை<br>வலை<br>கூடு | கட்டும்<br>பின்னும் |

______________________________

______________________________

______________________________

______________________________

3. முதல் எழுத்து ஒன்றுபோல் வரும் சொற்களை எடுத்து எழுது.

| | | | |
|---|---|---|---|
| சிலந்தி | ________ | ________ | ________ |
| சின்ன | ________ | ________ | ________ |

4. இறுதியில் ஒத்த ஓசையுடைய சொற்களை எடுத்து எழுது.

பின்னுமே, கட்டுமே, ________, ________, ________

________

# 20 உண்மையாக இருக்காது..!



கண்ணப்பர் ஒரு செல்வந்தர். கதைகள் கேட்பதில் மிகுந்த விருப்பம் உள்ளவர். ஆனால் கதை முடிவில் "இது உண்மையாக இருக்காது" என்று கூறிவிடுவார். ஆகையால் யாரும் அவருக்குக் கதை கூற விரும்புவதில்லை.

அதே ஊரில் அருளப்பர் என்பவர் வாழ்ந்து வந்தார். அவர் சிறந்த அறிவாளி.

ஒருநாள் கண்ணப்பர் அருளப்பரிடம் கதை கூறுமாறு கேட்டார்.

அருளப்பர், "சரி! ஆனால் கதை கூறும்போது நீங்கள் குறுக்கிட்டு, 'இது உண்மையாக இருக்காது' என்று கூறக் கூடாது. அவ்வாறு கூறினால் எனக்கு ஆயிரம் ரூபாய் கொடுக்க வேண்டும்" என்றார்.

கண்ணப்பர் சிரித்துக் கொண்டே, 'சரி!' என்றார். அருளப்பர் கதை கூறத் தொடங்கினார்.



மகேந்திரபுரி நாட்டை மன்னன் பூபாலன் ஆண்டு வந்தான். ஒரு சமயம் தன் வீரர்களுடன் மலைப் பகுதிக்குச் சென்று கொண்டிருந்தான்.

அப்போது ஒரு பருந்து பறந்து வந்து மன்னன் ஆடையில் எச்சமிட்டுவிட்டது.

அரசன் கோபம் கொள்ளவில்லை. பழைய ஆடைகளைத் தூக்கி எறிந்தான். புதிய ஆடைகளைக் கொண்டு வரச்செய்து அணிந்து கொண்டான்.

வழியில் ஒரு மரத்தடியில் தங்கி ஓய்வெடுத்தான். மீண்டும் அந்தப் பருந்து சத்தமிட்டுக் கொண்டே பறந்து வந்தது.



இம்முறை பருந்து அவன் வாளில் எச்சமிட்டு விட்டது. அரசன் கோபம் கொள்ளவில்லை. பழைய வாளைத் தூக்கி எறிந்தான். புதிய வாளைக் கொண்டு வரச் செய்தான்.

பயணத்தைத் தொடர்ந்தான். பருந்து சத்தமிட்டுக் கொண்டே மீண்டும் வந்தது. இம்முறை அவன் தலையில் எச்சமிட்டுவிட்டது. அரசன் கோபம் கொள்ளவில்லை. தன் தலையைக் கழற்றி வீசி எறிந்தான். புதிய தலையைக் கொண்டு வரச்செய்து அணிந்து கொண்டான்.

கண்ணப்பர் தன்னை மறந்து, 'இது உண்மையாக இருக்காது!' என்று கூறிவிட்டார்.

அருளப்பர் சிரித்துக் கொண்டே, "கண்ணப்பரே! சொன்னபடி எடுங்கள் ஆயிரம் ரூபாயை; கொடுங்கள் என்னிடம்!" என்றார்.



## 1. விடை கூறு.

1. கதை கேட்டு முடிந்தவுடன் கண்ணப்பர் என்ன கூறுவார்?
2. அருளப்பர் கூறிய நிபந்தனை என்ன?
3. பருந்து எச்சமிட்ட ஆடையை மன்னன் என்ன செய்தான்?
4. எச்சமிட்ட தலையை மன்னன் என்ன செய்ததாக அருளப்பர் கூறினார்?

## 2. உனக்குத் தெரிந்த ஒரு வேடிக்கைக் கதையைக் கூறு.

## 3. வகுப்பறை நூலகம்

உங்களுக்குக் கிடைக்கும் சிறுவர் இதழ்கள், செய்தித் தாள்கள், பழைய புத்தகங்கள் போன்றவற்றைச் சேகரியுங்கள்.

உங்களுக்குப் பிடித்தமான படங்கள், கதைகள், புதிர்கள், துணுக்குகள், பாடல்கள் போன்றவற்றைத் தனித்தனி அட்டையில் ஒட்டுங்கள். இவற்றைக் கொண்டு வகுப்பறை நூலகம் அமையுங்கள்; பயன்படுத்துங்கள்.



4. பாத்திரங்களுக்கு ஏற்ப பொம்மைகள் செய். குரலை மாற்றி, நீ படித்த கதையைப் பேசி நடித்துக் காட்டு.







5. பென்சில், நூல், பேனாமை இவற்றைக் கொண்டு செய்து பார்.







# 21 மாயவித்தை மாமா

தலையில் குல்லாய்; நீண்ட தொள தொளச் சட்டை; நீண்டு தொங்கும் மீசை; கையில் மந்திரக் கோல் – இவர்தான் மாயவித்தை மாமா. இவரைப் பார்த்தாலே குழந்தைகளுக்கு அளவில்லா மகிழ்ச்சி. குழந்தைகளைப் புதிய புதிய இடங்களுக்கு அழைத்துச் செல்வார். கேட்கும் கேள்விகளுக்கு விளக்கம் கூறுவார்.

ஒருநாள் மணி, கலா, பாலு மூவரையும் கடற்கரைக்கு அழைத்துச் சென்றார்.

மணி : அப்பப்பா... ஒன்றன்பின் ஒன்றாக எத்தனை அலைகள்! இவை எப்படி உருவாகின்றன?



மாமா : கடலின் மேற்பகுதியில் எப்போதும் காற்று வீசிக் கொண்டேயிருக்கும். அதனால் கடல் நீர் அசைந்து அசைந்து அலைகள் உருவாகின்றன.

பாலு : கடலுக்கு உள்ளேயும் அலைகள் இருக்குமா?

மாமா : கடலுக்கு அடியில் செல்லச் செல்ல அலைகள் இருக்காது. கடல் அமைதியாக இருக்கும். வாருங்கள் கடலுக்கு உள்ளேயே சென்று பார்ப்போம்.

மந்திரக் கோலை அசைத்தார். மாயப் பெட்டி ஒன்று வந்தது. குழந்தைகள் பெட்டியில் ஏறினர். அது கடலுக்கு மேலே பறந்தது. குழந்தைகள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர். விருட்டென்று பெட்டி கடலுக்குள் புகுந்தது. மாமாவும் குழந்தைகளும் பெட்டியை விட்டு வெளியே வந்தனர்; நீந்தத் தொடங்கினர்.

மணி : மாமா! கடல் நீர் உப்புக் கரிக்கிறதே, ஏன்?

மாமா : நிலத்தில் படிந்துள்ள உப்பை, மழை நீர் ஆறுகள் வழியாக அடித்துச் சென்று கடலில் சேர்க்கின்றது. கடல் நீர் ஆவியாகிக் கொண்டேயிருக்கிறது. உப்பு மட்டும் கடலிலேயே தங்கிவிடுகிறது. இதனால் கடல் நீர் உப்புக்கரிக்கிறது.

கலா : இங்கே பாருங்கள்! அழகிய வண்ண வண்ண மீன்கள்!

மாமா : மீன்கள் மட்டுமா! நண்டுகள், திமிங்கலங்கள், சுறாக்கள் போன்ற எண்ணற்ற உயிரினங்கள் இங்கு வாழ்கின்றன.



மணி : அதோ! ஒரு பெரிய கல் நகர்கிறதே!

மாமா : அது கல் அல்ல; கடல் ஆமை.
அதோ பாருங்கள்! நட்சத்திர மீன்கள்.



கலா : மிகவும் அழகாக இருக்கின்றன மாமா!

மாமா : அதோ! சுறா மீன்கள்! அந்தப் புதரின் பின்னால் ஒளிந்து கொள்வோம்.

பாலு : கடலுக்குள் மலை கூட உள்ளதே!

மாமா : ஆம். கடல் ஒரு பெரிய உலகம். மலைகள், பாறைகள் இங்கும் இருக்கும்.
அந்தச் சிவப்பான பாறைதான் பவளப்பாறை.

சிப்பிகள், கிளிஞ்சல்கள் போன்ற பல்வேறு பொருள்களைக் குழந்தைகள் சேகரித்தனர். மாயப்பெட்டியில் ஏறிக் கரைக்கு வந்தனர். கடலை விட்டுப் பிரிய மனமின்றி வீடு திரும்பினர்.

1. விடை கூறு.

   1. மாயவித்தை மாமாவைக் கண்டால் குழந்தைகளுக்கு அளவில்லா மகிழ்ச்சி. ஏன்?
   2. கடலில் அலைகள் தோன்றுவது ஏன்?
   3. கடல் நீர் ஏன் உப்பாக இருக்கிறது?

2. கடல் பற்றி நீ வேறு என்னென்ன அறிந்திருக்கிறாய்? குழுவில் கூறு.

3. கடலில் இருக்கும் உயிரினங்கள், பொருள்களின் படங்களை வரை; பெயர்களை எழுது.



4. உனக்கு ஒரு மாயக் கம்பளம் கிடைத்தால் நீ உன் நண்பர்களை எங்கெங்கு அழைத்துச் செல்வாய்? ஏன்?

5. சேர்த்தெழுது. விடைகளைப் பாடப்பகுதியில் அடிக்கோடிடு.

| | | | | |
|---|---|---|---|---|
| மாயம் | + | வித்தை | = | மாயவித்தை |
| பவளம் | + | பாறை | = | |
| படிந்து | + | உள்ளது | = | |
| மனம் | + | இன்றி | = | |

6. கொடுக்கப்பட்டிருக்கும் சொல்லுக்குரிய எதிர்ச் சொல்லைப் பாடப்பகுதியிலிருந்து எடுத்து நிரப்பு.

- குழந்தைகளுக்குச் சுற்றுலா என்றாலே ஒரே ____________ (கவலை)
- சுற்றுலா செல்வதற்குப் பேருந்தில் ______ (இறங்கினர்)
- பேருந்திற்கு ________ (உள்ளே) தெரிந்த ______ (சில) இயற்கைக் காட்சிகளைப் பார்த்து மகிழ்ந்தனர்.
- பொருட்காட்சியில் அமைக்கப்பட்டிருந்த ______________ (சிறிய) டைனோசரைப் பார்த்து வியந்தனர்.



7. இரட்டைச் சொற்களைப் படி.

தொளதொளச் சட்டை

குடுகுடுக் கிழவி

கடகட வண்டி

கலகலச் சிரிப்பு

விறுவிறு நடை

குளுகுளு வீடு

8. குழுவில் சேராததை வட்டமிடு. காரணம் கூறு.

- முத்து, பவளம், தங்கம், உப்பு.
- சூரியன், சந்திரன், நட்சத்திரமீன், மேகம்.
- தக்காளி, தாமரை, அல்லி, மல்லிகை.
- பேருந்து, கப்பல், தொடர்வண்டி, மிதிவண்டி.
- கபடி, கால்பந்து, இசைநாற்காலி, தொலைக்காட்சி.

9. சொல் அட்டைகளை இணைத்துத் தொடர்களை உருவாக்கு; எழுது.

பள்ளி

நேற்று

நாளை

சென்றோம்

பூங்கா

செல்வோம்

இன்று

செல்கிறோம்

கடற்கரை

________________________________________

________________________________________

________________________________________





## 10. அப்பு எங்கே?

அப்பு அழுது கொண்டிருந்தது. விலங்குகளுக்கு எல்லாம் ஒரே வியப்பு! "ஏன் இப்படி அழுகிறாய்?" என்று அப்புவிடம் கேட்டன.

அதற்கு அப்பு, "நான் அழகாக இல்லை. என்னுடைய கருப்பு வண்ணம் எனக்குப் பிடிக்கவேயில்லை. நான் அழகாக மாற ஆசைப்படுகிறேன்" என்றது.

அப்புவின் அழுகையை எவ்வாறு நிறுத்துவது? எல்லா விலங்குகளும் யோசித்தன...

புலி : என்னுடைய அழகிய வரிகளை எடுத்துக்கொள்.

மான் : என்னுடைய புள்ளிகளைத் தரட்டுமா?

மயில் : உனக்குப் பிடித்த வண்ணங்களை என்னிடமிருந்து எடுத்துக்கொள்.

நண்பர்கள் கொடுத்ததை அப்பு பெற்றுக்கொண்டது.

மறுநாள் உயிரியல் பூங்காவிற்கு வந்த குழந்தைகள் அப்புவைப் பார்த்து மிரண்டனர். 'நம் அப்பு எங்கே?' என்று தேட ஆரம்பித்தனர். அப்புவிற்கு ஏமாற்றம். 'எனக்கு இந்த வண்ணங்கள் வேண்டாம்' என நீரில் இறங்கியது. அதன் உடலில் ஒட்டியிருந்த வண்ணங்கள் நீரில் கரைந்தன. பழைய அப்புவாக வெளியே வந்தது.

அப்புவைப் பார்த்து, "ஆ! இதோ எங்கள் அப்பு!" எனக் குழந்தைகள் மகிழ்ந்தனர்.

1. அப்பு ஏன் அழுதது?
2. அப்புவின் கவலையைத் தீர்க்க விலங்குகள் என்ன செய்தன?
3. நிறம் மாறிய அப்புவைக் குழந்தைகளுக்கு ஏன் பிடிக்கவில்லை?
4. அப்பு ஏன் குளத்தில் இறங்கியது?



# 22 நாமும் நடிக்கலாம்



பாபு : பள்ளி ஆண்டு விழாவில்
நாம் ஒரு நாடகம் நடத்தலாமா?

தேவி : நடத்தலாமே! 'சிங்கமும் முயலும்' கதையை
நடிப்போமா?

ரஹீம் : அதில் இருவர்தானே நடிக்க முடியும்.
சிறுவர் கதைப் புத்தகங்களைப் படிப்போம்.
நல்ல கதையைத் தேர்ந்தெடுத்து நடிப்போம்.

பாபு : 'புறாக்களும் வேடனும்' கதையை
நடிக்கலாமா?

அமுதா : அதையே நடிக்கலாம்.

தேவி : நான் வேடனைப்போல் சிரித்துக்
காட்டட்டுமா? ஹா... ஹா... ஹா... ஹா...

ரஹீம் : நான் பறவைப்போலக் கத்துவேன். 'கீச்...
கீச்... கீச்... கீச்...'

பாபு : சரி! தேவி வேடனாக நடிக்கட்டும். ரஹீம் தலைமைப் புறாவாக நடிக்கட்டும். மற்றவர்கள் பிற புறாக்களாக நடிப்போம்.

அமுதா : நாடகத்திற்கு என்னென்ன பொருள்கள் தேவைப்படும்?

தேவி : வில், அம்பு, தலைப்பாகை, முகமூடிகள்...

ரஹீம் : வலை ஒன்று தேவை. சிறிதளவு தானியங்களும் வேண்டும்.

அமுதா : வில், அம்புகளை எவ்வாறு தயாரிப்பது?

ரஹீம் : மூங்கிலை வளைத்துக் கட்டி வில் செய்யலாம்! அட்டைகளை வெட்டி அம்பு செய்யலாம்!

தேவி : அட்டைகளைக் கொண்டு முகமூடிகளும் தயாரிக்கலாம்.



பாபு : வலை எங்கள் வீட்டில் உள்ளது.
தானியங்களும் நான் கொண்டுவருகிறேன்.

தேவி : வசனங்களைப் பேசிப் பழகுவோமா? ரஹீம்
நீ தலைமைப் புறாவாகப் பேசிக் காட்டு.

ரஹீம் : ஓ..! தாராளமாக...
"நண்பர்களே! அவசரப்படாதீர்கள்! இந்தக்
காட்டில் தானியங்கள் எப்படி வரும்?
இதில் ஏதோ சூழ்ச்சி உள்ளது."

பாபு : அமுதா, நீ ஒரு வசனத்தைப் பேசு.

அமுதா : "தலைவரே! உங்களுக்கு எதிலும்
சந்தேகம் தான். வீண் சந்தேகம்
வேண்டாம். தானியங்களை உண்போம்."

தேவி : சரி! ஒத்திகை பார்ப்போம்;
ஆண்டுவிழாவில் நடிப்போம்.





1. வினாக்களுக்கு விடை கூறு; எழுது:

1. மாணவர்கள் நடிக்கத் தேர்ந்தெடுத்த கதை எது? ஏன்?

2. நாடகத்தில் வரும் கதாப்பாத்திரங்கள் எவை?

3. நாடகத்திற்கு என்னென்ன பொருள்கள் கொண்டுவர முன்வந்தனர்?

4. வில், அம்பு இவற்றை எதை வைத்துச் செய்ய நினைத்தார்கள்?

2. குழுவில் முகமூடி தயார் செய்க. அவற்றைப் பயன்படுத்திப் பங்கேற்று நடித்துக்காட்டுக.









3. நிரப்பு.

| | | |
|---|---|---|
| நான் | நாடகம் | நடிப்பேன் |
| | பாட்டுப் | பாடுவேன் |
| | கதை | எழுதுவேன் |
| | முகமூடி | செய்வேன் |



| | | |
|---|---|---|
| நாங்கள் | நாடகம் | நடிப்போம் |
| | பாட்டுப் | ________ |
| | கதை | ________ |
| | முகமூடி | ________ |

| | | |
|---|---|---|
| அவள் | நாடகம் | நடிப்பாள் |
| | பாட்டுப் | ________ |
| | கதை | ________ |
| | முகமூடி | ________ |



| | | |
|---|---|---|
| அவர்கள் | நாடகம் | நடிப்பார்கள் |
| | பாட்டுப் | ________ |
| | கதை | ________ |
| | முகமூடி | ________ |

4. சொற்களை இணைத்துக் குழுவில் கதை உருவாக்கு.



| மிதிவண்டி | பாட்டி | காடி |
| குரங்கு | தாத்தா | பழம் |
| சிறுமி | புறா | பட்டம் |

5. பள்ளித் தோட்டம் அமைப்போம்.

வேணி : நாம் ஒன்றாகச் சேர்ந்து நம் பள்ளியில் ஒரு தோட்டம் அமைக்கலாமா?

குமார் : நன்றாக அமைக்கலாம். நம் பள்ளி பார்ப்பதற்கும் அழகாக இருக்கும்.

பூங்கொடி : விளையாடுவதற்கு இடம் ஒதுக்கிவிட்டுத் தோட்டம் அமைப்போம்.

வேணி : ... ... ...

இவர்கள் பள்ளித் தோட்டம் அமைக்கத் திட்டமிடுகிறார்கள். நீங்களும் உங்கள் பள்ளியியில் தோட்டம் அமைப்பது பற்றிக் கலந்துரையாடுக.

6. சொல் விளையாட்டு.



குழுவாக அமர்க. ஒருவர் ஒரு சொல்லைச் சொல்க. மற்றொருவர் அந்த சொல் முடியும் எழுத்தைக் கொண்டு புதிய சொல் சொல்க. இவ்வாறு விளையாட்டைத் தொடர்க.
(எ-டு) விளக்கு-குருவி–விறகு-குளவி...

7. 'நாளை ஒரு மனிதன் இந்த மரங்களை வெட்ட வருகிறான். அவனுக்கு மரங்களின் அவசியத்தை எவ்வாறு உணர்த்துவது?' விலங்குகளும் பறவைகளும் ஒன்றுகூடி ஒரு திட்டம் தீட்டின. மறுநாள்...

இந்த விலங்குகளும் பறவைகளும் மனிதனுக்கு என்ன சொல்ல விரும்புகின்றன? குழுவில் கலந்துரையாடு.



# 23 படவிளக்க அகராதி

மரங்கொத்தி



அழகான சிறிய பறவை. மரப்பட்டைகளின் அடியிலுள்ள புழு பூச்சிகளைக் கொத்தித் தின்னும். இதன் கொண்டை சிவப்பாகவும் முகம் கருமையாகவும் முதுகு பொன் நிறமாகவும் இருக்கும்.

மிளகு



இது கொடியில் படரும் தாவரம். கனி சமையலுக்குப் பயன்படும் நறுமணப் பொருள். மருந்துப் பொருளாகவும் பயன்படுகிறது.

மான்



அழகான விலங்கு. ஆண் மானுக்கு மட்டுமே நீண்ட கொம்புகள் உண்டு. இவை கூட்டம் கூட்டமாக வாழும். மான்களில் அழகானவை புள்ளிமான்கள்.

மீன்கொத்தி



அழகிய சிறுபறவை. மீன், தவளை, புழு, பூச்சி முதலியவற்றை உண்ணும். இதன் அலகு சிவப்பாகவும் சிறகுகள் நீலமாகவும் தலை, கழுத்து செம்பழுப்பு நிறமாகவும் காணப்படும்.

## முள்ளம் பன்றி



உடலெங்கும் நீண்ட முட்களை உடைய விலங்கு. இதன் ரோமங்களே முட்களாக உள்ளன. இதன் உடல் பன்றிபோல் இருக்கும். இது எவருக்கும் தீங்கு செய்யாது.

## மெழுகுவர்த்தி



இது தேன்மெழுகு, பாரபின், எண்ணெய் போன்றவற்றிலிருந்து தயாரிக்கப்படுகிறது. தற்போது பலநிறங்களிலும் பல வடிவங்களிலும் தயாரிக்கப்படுகின்றது.

## மூங்கில்



நீண்டு வளரும் புல் வகையைச் சேர்ந்தது. இது காகிதம், ஏணி, கூடை, பாய், மேசை, நாற்காலி போன்ற பல பொருள்கள் செய்யப் பயன்படுகின்றது.

## மேகம்



நீர் நிலைகளில் உள்ள நீர் ஆவியாகி மேலே சென்று மேகமாகத் தோன்றுகிறது. இது குளிர்ந்த காற்றுப் பட்டவுடன் மழையாகப் பொழிகின்றது.

| | |
|---|---|
| மைனா<br><br>அழகான சிறு பறவை. 'நாகணவாய்ப்புள்' என்றும் கூறுவர். புழு, பூச்சி, வெட்டுக்கிளி போன்றவற்றைப் பிடித்து உண்ணும். கிளியைப் போலவே இதனையும் பேசப் பழக்கலாம். | மொகஞ்சதாரோ<br><br>பூமியின் அடியில் புதையுண்டு போன நகரம். இங்குப் பல்வேறு பொருள்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இந்நகரம் ஏழுமுறை அழிந்து மீண்டும் கட்டப்பட்டதாகக் கூறப்படுகிறது. |

1. பத்தியைப் படித்து, 'ப' வரிசையில் அமைந்துள்ள சொற்களை அடிக்கோடிட்டு அகர வரிசையில் எழுது.

பொன்னி பந்து விளையாடிக் கொண்டிருந்தாள். பந்து தோட்டத்தில் இருந்த பூச்செடி மேல் விழுந்தது. செடியின் அருகே ஒரு எறும்புப் புற்று இருந்தது. என்ன செய்வது என்று தெரியாமல் உதவிக்குத் தன் பாட்டியை அழைத்தாள்.

________________ ________________

________________ ________________

________________

2. படவிளக்க அகராதி உருவாக்கு.

படங்களைச் சேகரி; கட்டத்தில் ஒட்டு;
ஒவ்வொன்றைப் பற்றியும் மூன்று வரிகள் எழுது.

கப்பல்

காகம்

கிளி

கீரி

# 24 செய்யுள் பகுதி

## 1. பாரதிதாசன் ஆத்தி சூடி

1. அனைவரும் உறவினர்
2. ஈதல் இன்பம்
3. ஒற்றுமை அமைதி
4. கல்லார் நலிவர்
5. கெடு நினைவு அகற்று
6. சோர்வு நீக்கு
7. தூய நீராடு
8. தெருவெலாம் மரம் வளர்
9. வெறும் பேச்சுப் பேசேல்
10. வையம் வாழ வாழ்

*-பாவேந்தர் பாரதிதாசனார்*

செய்யுள் பகுதி முழுமையையும் வாய்விட்டுப் படி; மனப்பாடம் செய்.

**சொற்பொருள் அறிக :**

ஈதல்-கொடுத்தல்; இன்பம்-மகிழ்ச்சி; நலிவர்-துன்பம் அடைவர்; கெடுநினைவு-கெட்ட எண்ணம்; அகற்று-நீக்கு; சோர்வு-சோம்பல்; வையம்-உலகம்; வெறும்பேச்சு-பயனற்ற பேச்சு; பேசேல்-பேசாதே;

❖ நாடும் மொழியும் நமது இரு கண்கள்

## 2. திருக்குறள்



1. நீரின்றி அமையாது உலகெனின் யார்யார்க்கும்
   வானின்றி அமையாது ஒழுக்கு.

2. புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை
   வாய்மையால் காணப் படும்.

3. கற்க கசடறக் கற்பவை கற்றபின்
   நிற்க அதற்குத் தக.

4. தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
   கற்றனைத் தூறும் அறிவு.

5. கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
   மாடல்ல மற்றை யவை.

6. ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும் தன்மகனைச்
   சான்றோன் எனக்கேட்ட தாய்.

7. முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்து
   அகநக நட்பது நட்பு.

8. உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
   இடுக்கண் களைவதாம் நட்பு.

9. இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
   நன்னயம் செய்து விடல்.

10. நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லது
    அன்றே மறப்பது நன்று.

-திருவள்ளுவர்

## சொற்களின் பொருளும் குறளின் கருத்தும்.

1. ஒழுக்கு - ஒழுக்கம், நல்ல நடத்தை.
   - இவ்வுலகில் நீரில்லாமல் உயிர்கள் வாழமுடியாது. நீருக்குக் காரணமான மழை பெய்யாவிட்டால் மனிதர்களிடம் சிறந்த ஒழுக்கமும் இல்லாமல் போய்விடும்.

2. புறம் - வெளிப்பக்கம்; அகம் - உள்ளம்; வாய்மை - உண்மை.
   - ஒருவரது உடல் தூய்மை நீரினால் அமையும். உள்ளத்தின் தூய்மை அவர் பேசும் உண்மையால் உணரப்படும்.

3. கசடு - பிழை; அற - நீங்க.
   - கற்க வேண்டிய நூல்களைத் தேர்ந்தெடுத்துப் பிழையில்லாது கற்க வேண்டும். கற்றபின் அதற்கேற்றவாறு நடக்க வேண்டும்.

4. தொட்டனைத்து - தோண்டத்தோண்ட; கேணி - கிணறு; ஊறும் - பெருகும்.
   - ஆற்றுப்பகுதியில் மணலைத் தோண்டத் தோண்ட நீர் பெருகும். அதுபோல நூல்களைப் படிக்கப் படிக்க அறிவு வளரும்.

5. கேடு-அழிவு; விழுச்செல்வம்-பெருமையான செல்வம்.
   - அழிவில்லாத பெருமையான செல்வம் கல்வியே. ஏனைய செல்வங்கள் அழிந்துவிடும்.

> ❖ முன்னேற்றத்திற்கு அழைத்துச் செல்வது நல்லொழுக்கம்

6. சான்றோன் - அறிவு நிரம்பியவன்; உவக்கும் - மகிழும்; ஈன்றபொழுது- பெற்றெடுத்தபோது.
- தன் மகனை 'அறிவாளி' எனப் பிறர் புகழக் கேட்டதாய், அவனைப் பெற்ற நேரத்தில் அடைந்த இன்பத்தைக் காட்டிலும் மிகுந்த மகிழ்ச்சி அடைவார்.

7. நக - மகிழ; அன்று - இல்லை.
- முகம் மலர நட்புச் செய்வதைவிட உள்ளம் மகிழும் வண்ணம் நட்புச் செய்வதே, உண்மையான நட்பாகும்.

8. உடுக்கை - உடுத்திய உடை; இடுக்கண் - துன்பம்; களைவது - நீக்குவது.
- உடை இடுப்பிலிருந்து நழுவும்போது, கை விரைந்து உதவுவதுபோல துன்பம் வரும்போது
விரைந்து உதவுவதே சிறந்த நட்பாகும்.

9. இன்னா - தீங்கு; ஒறுத்தல் - தண்டித்தல்; நாண - வெட்கப்பட; நன்னயம் - நன்மை.
- தமக்குத் தீமை செய்தவரைத் தண்டிக்க
விரும்பினால், அவர் வெட்கப்படும்படி அவருக்கு
நன்மை செய்க.

10. நன்றி - நன்மை.
- ஒருவர் செய்த நன்மையை மறந்துவிடுதல் நல்ல குணம் இல்லை; அவர் செய்த தீமையை உடனே மறப்பது நல்ல பண்பாகும்.

❖ உடலுக்கு உணவு எவ்வளவு இன்றியமையாததோ அத்தகையதே அறிவுக்குக் கல்வி.



## 3. மூதுரை

1. அட்டாலும் பால்சுவையின் குன்றாது அளவளாய்
நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர்
கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே சங்கு
சுட்டாலும் வெண்மை தரும்.

2. நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலமிக்க
நல்லார்சொல் கேட்பதுவும் நன்றே - நல்லார்
குணங்கள் உரைப்பதுவும் நன்றே அவரோடு
இணங்கி இருப்பதுவும் நன்று.

3. மன்னனும் மாசறக் கற்றோனும் சீர்தூக்கின்
மன்னனில் கற்றோன் சிறப்புடையன் - மன்னற்குத்
தன்தேசம் அல்லால் சிறப்பில்லை கற்றோர்க்குச்
சென்ற இடமெல்லாம் சிறப்பு.

-ஔவையார்

❖ கடுமையான உழைப்பே நமக்குச் செல்வத்தைத் தரும்; நமது வறுமையை ஒழிக்கும்.

## சொற்பொருள் விளக்கம்

1. அட்டாலும் - காய்ச்சினாலும்; குன்றாது - குறையாது; அளவளாய் - கலந்து பேசி.
   - பாலை எவ்வளவு காய்ச்சினாலும் தன் சுவையில் குறைவதில்லை. சங்கு எவ்வளவு சுட்டாலும் வெண்மை நிறமாகவே இருக்கும்; அதுபோலச் சான்றோர் தம் நிலையில் கெட்டாலும் சான்றோராகவே விளங்குவர். ஆனால் நண்பரல்லாதவர்களோடு எவ்வளவு பழகினாலும் அவர்கள் நண்பராகமாட்டார்கள்.

2. உரைப்பது - சொல்வது; இணங்கி - சேர்ந்து.
   - ஒழுக்கத்தில் உயர்ந்த சான்றோர்களைக் காண்பதும், அவர்கள் சொற்களைக் கேட்பதும், அவர்கள் குணங்களைச் சொல்வதும், அவர்களோடு சேர்ந்து இருப்பதும் நன்மை தரும்.

3. மாசற - குற்றம்நீங்க; சீர்தூக்கின் - ஆராய்ந்து பார்த்தால்; தேசம் - நாடு.
   - அரசனையும் குற்றம் நீங்கக் கற்றவனையும் ஒப்பிட்டு ஆராய்ந்து பார்த்தால் கற்றவனே சிறப்புடையவன் ஆவான். ஏனெனில் அரசனுக்குத் தன் நாட்டில் மட்டுமே சிறப்பு. கற்றவனுக்குச் செல்லும் இடங்களில் எல்லாம் சிறப்பு.

> ✣ தனக்கென்று வாழாது பிறருக்கென்று வாழ்பவனே மனிதன்; அவனது வாழ்க்கையே வாழ்க்கை.

## 4. நறுந்தொகை

1. நூறாண்டு பழகினும் மூர்க்கர் கேண்மை
நீர்க்குள் பாசிபோல் வேர்க்கொள் ளாதே.

2. ஒருநாள் பழகினும் பெரியோர் கேண்மை
இருநிலம் பிளக்க வேர்வீழ்க் கும்மே

3. கற்கை நன்றே கற்கை நன்றே
பிச்சை புகினும் கற்கை நன்றே.

4. எக்குடிப் பிறப்பினும் யாவரே ஆயினும்
அக்குடியில் கற்றோரை மேல்வரு கென்பர்.

—அதிவீரராம பாண்டியன்

### பொருள் அறிக.

1. அன்பில்லாத மூர்க்கர்களிடம் நூறாண்டு பழகினாலும், நீரில் உள்ள பாசி வேர்கொள்ளாததுபோல ஆழமான நட்புக் கொள்ளமாட்டார்கள்.
2. அறிவில் சிறந்த பெரியோர்களிடம் ஒருநாள் பழகினாலும் பெரிய நிலம் பிளக்கும்படி வேரூன்றி நிற்கும் மரத்தைப்போல நட்புக் கொள்வார்கள்.
3. பிறரிடம் பிச்சை எடுத்து உயிர்வாழ்ந்தாலும் கல்வி கற்பதை ஒரு நாளும் விட்டுவிடாதே.
4. ஒருவர் பிறந்த குடியையோ, வசதியையோ கருதாமல் கல்வியில் சிறந்த அறிஞர்களையே மக்கள் மதித்துப் போற்றுவர்

❖ நேர்மையும் உண்மையும் உள்ள மனிதனுடன் நட்புக்கொள்வது நல்ல நட்பாகும்.

# திறன்களும் பாட எண்களும்

| திறன் பகுதி | திறன்கள் | பாட எண் |
|---|---|---|
| 1. கேட்டல் | 1. வருணனையும் விவரிப்புகளையும் சொல் விளையாட்டுப் புதிர்களையும் கேட்டுப் புரிந்து கொள்ளுதல் | 1, 5, 13 |
| | 2. உரையாடல்களை அறிமுகமாகாத சூழலில் புரிந்து கொள்ள இயலுதல் | 4 |
| | 3. வாய் மொழியிலான விளையாட்டு விதிமுறைகளையும் எளிய செயல்திட்ட வேலைகளையும் செய்தல். | 2, 3 |
| 2. பேசுதல் | 4. சரியான உச்சரிப்புடன் பேசுதல் | 6, 7, 11, 12 |
| | 5. உரிய ஏற்ற இறக்கங்களுடனும் நடிப்புடனும் தெரிந்த எளிய கதையைச் சொல்லும் திறன். | 8 |
| | 6. அறிமுகமான செய்திகளையும் விவரங்களையும் விவரித்து உரைக்கும் திறன். | 9 |
| | 7. சற்றுக் கூடுதலான பிணைவுக் கேள்விகள் கேட்டல். | 16 |
| 3. படித்தல் | 8. சாலை அடையாளங்களையும் சுவரொட்டிகளையும், எளிய எச்சரிக்கைகளையும் படிக்கும் திறன். | 15 |
| | 9. பிற குழந்தைகளின் கையெழுத்துகளைப் படிக்கும் திறன். | 14 |
| | 10. எளிய கதைப் புத்தகங்களையும் குழந்தைகளுக்கான வெளியீடுகளையும் படித்தல். | 10, 20 |

